உ

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீகணபதியானந்ததேசிகன் திருவடிவாழ்க.

இஃது,

# வேதாகம

# சோபானமுறை

கத்தியரூபம்

முதற்பாகம்.

விலை அணா-12.



முதற்பதிப்பு.

விருதுபட்டி

சச்சிதானந்த அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

1909.

உ

சிவமயம்.



# வேதாகம
# சோபான முறை.

## பாயிரம்.

### விநாயகர் வணக்கம்.

ஊனை நாடி யுழல்பிறவிக் கொடுங்
கானை நீந்திக் கதியடைந் தானந்தத்
தேனை மாந்தித் திளைத்திட மாமகத்
தியானைமாமுகத் தானையிறைஞ்சுவாம்.

### சிவபெருமான்.

சீர்கொண்டவானந்த மாகியெங்குஞ்
செறிவாகிப்பரமாகித் திரமதாகி
யேர்கொண்டகருணை திரு வுருவமாகி [டோன்
யெழில்கொண்ட மலைமகளோ டிடத்திற்கொண்

கார்கொண்டநிறங்கொண்ட முகுந்தனுதிக்
கடவுளர்வந்தடிபரவுங் கடவுள்கொன்றைத்
தார்கொண்டமுடியனைவ னடியைத்தாழ்ந்து
தாழாதபெருங்கதியில் வாழாநிற்பாம்.

## உமாதேவியார்.

மாற்கரியசெம்பதத்தோன் றேவியாகி
வல்வினையேனைதாவிக் காவியாகி
மேற்கருணைத்திருவுருவ முடையாளாகி
வித்தகமாயைந்தொழிற்கும் வித்தாய்நின்ற
சேற்கருங்கட்டவளநகைக் களபக்கொங்கைச்
சிற்பரையிங்கெமையாளு முமையாள்செம்பொற்
காற்கமலந்தலைக்கமலம் பொருந்தத்தாங்கிக்
கைக்கமலங்குவித்தருந்துங் கமலந்தீர்வாம்.

## சபாபதி.

வேதவாகமங்கட்கெட்டா
விழுப்பொருளாயெஞ்ஞான்று
மாதியாய்முதலுநள்ளு
மந்தமுங்கடந்துநின்ற
சோதியாயருண்மெஞ்ஞானச்
சொரூபவம்பலத்துநின்று
போதினன்முகன்மால்போற்றப்
புரிந்தருணடனம்போற்றி.

நிலக்கமின் றியகணத் தினர்யாரையு
மிருமருங்கினுஞ்சேர
விலக்கும்வேத்திரத் திரும்படைக்கரத்தினன்
விரைமலர்ப் பதம்போற்றி.

## திருஞானசம்பந்த சுவாமிக

மருளோடப்புத்தரெலா மருண்டோடவருகரி
தருளோடவாரூட வாற்றெதிரேயேோட
வெருளோடப்பாண்டியனார் வினையோடச்செய்
திருளோடவருளோட மேற்றினன்பதம்போற்

திருநாவுக்கரசுசுவாமிகள்முதலிய மூவர்கள்

மருங்குகடற்கன்மிதப்பில் வந்தார்தம்பதம்போற்றி
பொருங்கரிமேற்கயிலையினிற் போனார்தம்பதம்போற்
நெருங்குநரிபரியாக்கி நிறுத்தினர்தம்பதம்போற்றி
யிரும்பொருள்கேட்டரன்பக்கத் திருந்தார்தம்பதம்போ

## சிவனடியார்கள்.

ஆதியாயுளநாயகன்புகழ்
யாவுமன்பொடகங்கசிந்
தோதுமாதவநாயன்மார்கழ
லுன்னியேயருளுய்த்திடுந்
தீதிலாமணியக்குமந்திரு
நீறுமேனி திகழ்ந்திடும்
பூதிசாதனர்யாவரேனும்
வணங்கியன்பொடு போற்றுவாம்.

## ஆசிரியர்.

திருக்குருவாயவென்னைத் திரிமலமணுகிகூடிப்
பிரிவிலாவினைப்பிரித்துப்பேதையர்க்கடிமையாக்கித்
தெரிவிலாதனவேசெய்யுந் தீயிருளகற்றியாண்ட
குருகணபதியானந்தா நின்சுகங்கூடுமோறுளதோ.

## அவையடக்கம்.

தாதாரிதழிப்பரனளித்தமறை யாகமசாரந்தொகுத்து
வேதாகமசோபானமென விளம்பத்துணிந்ததைந்துதலைக்
கேதாற்சமர்ந்தவசுந்தரையைக் கேதமறவேயெனதுமுடி
மீதாற்சுமப்பனெனாங்கூழ்விளம்புந்தன்மையெனலாமால்

---

¶ 80-வது பக்கம் கடாசிவரியில் காரியொல என்றதை காரியமும் என்றுகொள்க.

† 110-ம் பக்கம் 8-வது வரியில் மும்மூர்த்திகளிடத்தில் என்றதை நாரதர்பிரயாதாரிணுமூர்த்தி யெனக்கொள்க

# மேற்கோள் காட்டிய
# நூல்களின்பெயர்கள்.

அகஸ்தியர் ஞானச்சுருக்கம்
ஷை. திருமந்திரம்
அகப்பேய்ச்சித்தர்பாடல்
இடைக்காட்டு சித்தர்பாடல்
ஈசுரகீதை
ஒளிவிலொடுக்கம்
ஔவைகுறள்
குருத்திரட்டு
கைவல்யநவநீதம்
சசிவன்னபோதம்
சிவதருமோத்தரம்
சிவஞானசித்தியார்
சிவப்பிரகாசவெண்பா
சிவவாக்கியர்
சுகர்கைவல்யம்
ஞானவாசிட்டம்
தாயுமானசுவாமிகள்
திருவாய்மொழி
திருவிளையாடற்புராணம்
திருவாதவூரார்புராணம்
திருமூலர்திருமந்திரம்
திருவள்ளுவர் குறள்
திருக்களிற்றுப்படியார்
திருவாசகம்
திருப்புகழ்
தேவாரம்
தேவிகாலோத்தரம்
நாலடியார்
பகவத்கீதை
பட்டினத்தார்பாடல்
பாடுதுறை
பிரமகீதை
பிரபுலிங்கலீலை
புட்பவிதி
புசண்டர்உபநிடதம்
பெரியபுராணம்
பெருந்திரட்டு
மகாவாக்கியம்
மெய்ஞ்ஞானவிளக்கம்
மோகவதைப்பரணி
வள்ளலார்சாத்திரம்
விருத்தாசலபுராணம்
வைராக்கியசதகம்

உ
சிவமயம்.

# வேதாகம சோபான முறை.

## பொதுவி லுபதேசம்.

ஆசிரியர்:—அநாதிமல முத்தனாகிய பரமசிவன் அநாதிமலப் பெத்தர்களாகிய ஆன்மாக்கள், தன் திருவடிஞானத்தை அடைதற்பொருட்டு, திருவாய்மலர்ந்தருளியவை, வேதம், ஆகமம், என இருவகைப்படும் வேதம், இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என்று 4 வகைப்படும் அவற்றுள் இருக்குவேதம் 21 சாகைகளும், யசுர்வேதம் 109 சாகைகளும், சாமவேதம் 1000 சாகைகளும், அதர்வணவேதம் 50 சாகைகளுமாக உள்ளனவாம் ஒருமரத்தையுடையவன் தன்பிள்ளைகளுக்கு அதன் கிளைகளைப் பிரித்துக்கொடுப்பதுபோல் வியாசபகவான் வேதத்தை நான்கு பாகங்களாக்கி அவைகளில் பல சாகைகளைக் கல்பித்ததோடும் ஒவ்வொருசாகைகளுக்கு உரியவிதிகளையும் ஏற்படுத்தினர் எத்தனை சாகைகளுண்டோ அத்தனை உபநிஷத்துக்களுண்டென முக்திகோபநிஷத்திலும், மஹாவாக்கியரத்நாவளியிலுஞ் சொல்லப்பட்டிருக்கின்றன. சாகைகள் (1180) ஆகையால் உபநிஷத்துக்களும் ஆயிரத்து நூற்றெண்பதுண்டு இவைகளில் எண்ணூற்று நாற்பது உபநிஷத்துக்களில், நித்தியம் நைமித்திகம் காமியம் பிராயச்சித்தம் என விதிகன்மங்க

ன்கினையும் போதிப்பதோடும் அவ்வழித்தாயொழுகும் ஜீவர்களின் † மலதோஷத்தை நிவர்த்திப்பதெதுவோ அதனையே கர்மகாண்டமெனச் சொல்லப்படும் இருநூற்று முப்பத்திரண்டு உபநிஷத்துக்களில் பரமேஸ்வரனது திவ்யகல்யாண குணங்களைத் துதித்து நிற்பதோடும் அதன் வழித்தாயொழுகும் ஜீவர்களின் * விக்ஷேபதோசத்தை நிவர்த்திப்பதெதுவோ அதனையே உபாசனகாண்டமெனச் சொல்லப்படும் நூற்றெட்டு உபநிஷத்துக்களில் அறிவானந்த ஐக்கியத்தைப் போதிப்பதோடும் அவ்வழித்தாயொழுகும் ஜீவர்களின் ‡ ஆவரண தோஷத்தை நிவர்த்தித்து மோக்ஷ இன்பத்தையடைவிப்பதெதுவோ அதனையே ஞானகாண்டமெனச் சொல்லப்படும் பக்திகாண்டத்தில் அஷ்டாங்க யோகங்களும் அடங்கியிருக்கின்றன.

இனி ஆகமம், காமிகம், யோகஜம், சிந்தியம், காரணம், அசிதம், தீப்தம், சூக்குமம், சகஸ்ரம்,

---

† மலம் என்றால் பாவம் இது சமஸ்காரரூபமாயிருப்பதால் அதிசூக்ஷுமமாயிருக்கிறது பிரத்தியக்ஷமாய்ப் பார்க்கப்படுகிறதில்லை அசுபவாசனையால் அதையநுமானிக்க வேண்டியதாயிருக்கிறது நிஷித்தகர்மத்தாலாவது விஷயத்திலாவது எவனுக்கு இச்சையுண்டோ அவனுடையசித்தத்தில் அசுபவாசனையிருக்கின்றது ஆகையால் அவன் மலதோஷத்தோடு கூடியவனென்று அநுமானிக்கத்தக்கவன். * விக்ஷேபம் சித்தசாஞ்சல்லியம் ‡ ஆவரணம் அறிவானந்த ஐக்கியத்தை யறியவொட்டாமல் மறைத்தல்

அஞ்சுமான், சுப்பிரபேதம், விசயம், நிச்சுவாசம், சுவாயம்புவம், ஆக்கினேயம், வீரம், ரௌரவம், மகுடம், விமலம், சந்திரஞானம், முகவிம்பம், புரோற்கீதம், லளிதம், சித்தம், சந்தானம், சர்வோக்தம், பாரமேசுரம், கிரணம், வாதுளம் என இருபத்தெட்டாம் இவ்வாகமங்கள் மாந்திரமெனவும், தந்திரமெனவும், சித்தாந்தம் எனவும் பெயர்பெறும் இவ்விருபத்தெட்டுச் சிவாகமங்களுக்கும் ஒவ்வொன்றுக்குக் கோடி கிரந்தமாக இருபத்தெட்டுக்கோடி கிரந்தங்களாம் இவை ஞானபாதம் யோகபாதம், கிரியாபாதம், சரியாபாதம் என்று தனித்தனி நான்கு பாதங்களை உடையனவாயிருக்கும். இவற்றுள் ஞானபாதம் பதி, பசு, பாசம் என்னுந் திரிபதார்த்தங்களின் ஸ்வரூபத்தையும் யோகபாதம் பிராணாயாமம் முதலிய அங்கங்களோடுங் கூடிய சிவயோகத்தையும், கிரியாபாதம், மந்திரங்களின் உத்தாரம், சந்தியாவந்தனம், பூசைசெபம், ஓமம் என்பனவற்றையும் சமயவிசேஷ நிருவாண ஆசாரியாபிஷேகங்களையும் சரியாபாதம், சமயாசாரங்களையும், உபதேசிக்கும் இவ்வாகமங்கள் பக்குவான்மாக்களுக்கு பந்தத்தை நாசப்பண்ணி சிவஞானத்தை யுதிப்பித்து மோக்ஷ இன்பத்தை அளிக்கின்றன ஆனதுபற்றி ஆன்றோரும் வேதம் ஆகமம் மெய்யாம் இறைவனூல் என்றனர்.

சீடன்:—ஆகமத்தில் கூறிய சரியையாதி மூன்றும் வேதத்திற்கூறிய கன்மம் பக்தியாகிய இரண்டனுள் அடங்குவனவோ என்ன.

ஆசிரியர்:—வேதத்திற்கூறிய கர்மம், விகிதம், நிஷித்தமென, இருவகைத்தாம். புருஷனுடைய பிரவிருத்தியின் பொருட்டெக்கருமங்களை வேதம் விதிக்கின்றதோ அவை விகிதகர்மமாம் எக்கருமங்களை வேதம் நிஷேதிக்கின்றதோ அவை நிஷித்தகர்மமாம். வேதத்தால் விதிக்கப்படாமலும் அல்லது நிஷேதிக்கப்படாமலும்விருப்பு வெறுப்பில்லாது செய்யப்படும் ஸ்வபாவிகமான நடை சௌசம் முதலிய கர்மங்கள் உதாசினகர்மமாம் அவையீண்டுக் கொள்ளப்படவில்லை, ஏனெனில் வேதங்கூறியபடி. செய்யும் கர்மமே கர்மமாமென்பது நியமமாயிருத்தலின் கள்குடித்தல், சூதாடல், முதலிய கர்மங்கள் காலசூத்திராதி நரகமடைதற் கேதுவாயிருத்தலால் அவையொருபோதும் செய்யத்தக்கவையல்ல, இவை நிஷித்தகன்மமாம் விகிதகருமம் நித்தியம், நைமித்திகம், காமியம், பிராய்ச்சித்தமென நான்கு வகைத்தாம்.

தினந்தோறும் செய்யவேண்டுமென்று விதித்துள்ள சந்தியாவர்தனமுதலிய கர்மங்கள் நித்திய கன்மமெனப்படும்.

ஒரு நிமித்தம்பற்றிச் செய்யுங்கர்மங்கள் நைமித்திக கன்மமெனப்படும்.

அவை கிரஹணகாலத்தில் செய்யும்சிரார்த்தங்கள்; வயோவிருத்தன், சாதிவிருத்தன், ஆசிரமவிருத்தன், வித்தியாவிருத்தன், தர்மவிருத்தன், ஞானவிருத்தனென்னுமிவர்கள் வருங்காலத்தில் செய்யும் உத்தரணவடிவகன்மங்கள் முதலியவைகளாம்.

பயனைவிரும்பிச்செய்யும் கர்மங்கள் காமியகன்மமெனப்படும்.

அவை மழையை விரும்புகிறவன் செய்யும்காரீரியாகமும் சுவர்க்கத்தை விரும்புகிறவன் செய்யும் அக்கினிஹோத்திரம் சோமயாக முதலியவைகளுமாம்.

பாவநிவிர்த்தியின் பொருட்டுச்செய்யும் சாந்திராயண விரதமுதலிய கன்மங்கள் பிராய்ச்சித்தகன்மமெனப்படும்.

சாந்திராயணவிரதமாவது பகலில்மூன்று காலத்திலும் ஸ்நானஞ்செய்து, பௌர்ணமாவாசியில் உப்பின்றிய பதினைந்து கவள அன்னம்புசித்து மறுநாளான கிருஷ்ணபக்ஷப் பிரதமைமுதல் அந்தப்பதினைந்து கவளத்தில் ஒவ்வொரு கவளமாகக்குறைத்துவந்து அமாவாசியில் சுத்தோபவாசமிருந்து மறுநாள்தொடங்கி யொவ்வொரு கவளமாக வளர்த்திக்கொண்டு வந்து மறுபடி பௌர்ணமாவாசியில் பதினைந்து கவளம் புசிப்பதாம் (இவ்வாறு செய்தல் பிபிலிகா சாந்திராயண விரதமென்று சொல்லப்படும்) இது பலவகைப்பட்டிருக்கும்.

## பத்தி.

கடவுளிடத்துப் பூச்சிய (பூசிக்கத்தக்க) புத்தியோடுண்டாகும் பிரீதி (அன்பு) பத்தியெனப்படும். இது மனத்தினாற்செய்யும் பத்தி, வாக்கினாற் செய்யும்பத்தி, காயத்தினாற்செய்யும்பத்தி, இலௌகிகபத்தி வைதிகபத்தி, ஆத்தியாத்மிகபத்தி, யெனப்பலவாம்.

1. தியானம் தாரணைகளோடுகூடி வேதங்களின் ஸ்மரணங்களினால் கடவுளுக்குப் பிரீதியையுண்டுபண்ணும் பத்தி மனத்தினாற்செய்யும் பத்தியாம்.

2. இரவும் பகலுமிளைப்பில்லாது வேதமந்திரங்களை யுச்சரிப்பதனாலும் ஆரண்யகமென்னும் வேதபாகத்தினுடைய ஜபத்தினாலு முண்டாகின்ற பத்தி வாக்கினாற்செய்யும் பத்தியாம்.

3. விரதம் உபவாசம் நியமமென்னு மிவைகள் காயத்தினாற்செய்யும் பத்தியாம்.

4. அர்க்கிய பாத்திரமுதலிய வுபசாரங்களாலும், நைவேத்திய வஸ்துக்களாலும் கடவுளை வுபசரிப்பதும், இரவிலும் விழித்துப் பூசைசெய்வதும் இலௌகிகபத்தியாம்.

5. இருக்கு யசுர் சாமவேதங்களின் மந்திர ஜபங்களாலும் (வேத) ஸம்மிதாத்தியயன முதலியவைகளாலும் ஹவிசை ஹோமஞ்செய்கிற கிரியைகளினாலும் செய்யும்பத்தி வைதிகபத்தியாம்.

6. பிரமதத்துவம் பிரகிருதிதத்துவம் ஜீவதத்துவம் முதலியவைகளின் சொரூபவிசாரமும் யோகத்தினாற் சிவவிஷ்ணுக்களின் சொரூபத்தியானமும் ஆத்தியாத்மீக பத்தியாம் பத்திசெய்யும் போது.

சதுர்மறையொழிந்த வாதனைபொல்லாத்
தர்க்கவாதனை யுலகத்தின்
மதமுறுசமையவா தனைதார
மக்கள்சுற்றத்தின் வாதனையு
மிதமுறுபொருளில் வாதனைதேகேந்
தியமனம்புத்தி நற்பிராணன்
முதலவாதனையும் வித்தைவாதனையும்
முடிவில்போகத்தின் வாதனையும்
ஏறுடைச்சிவனைத் திருநெடுமாலை
யிகழும்வாதனையும் வேதத்திற்
கூறிடும்ஞான சாதனமாகக்
கொள்ளுமுத்தூள புண்டரத்தை
மாறுடனிகழும் வாதனைபாவ
வாதனையாவுமா றுடர்க்கு
வேறெம்பரமாத் துவிதஞானத்தை
விலக்கிடும் விரோதிகளின்னவரே.

வேறு.

ஆதலால்வீடதனி லாசையுள்ளோன்
அதின்மிகவுந் தாற்பரியனாகிமுன்ன
மோதுவாதனைகளெல்லா மிகந்தெப்போது
முற்றபரமாத்துவித ஞானியாவன்

வேதவேதாந்தங்க ளுரைக்கப்பட்ட
மேலானவத்துவித ஞானமாகு
நாதனும்பிரமத்தை நவிலலாமோ
நாமௌனத் திருப்பதல்லா லுகத்தீரே.

இவற்றை விட்டுப் பிராதக்காலம், மத்தியான காலம், சாயங்காலம், மத்தியராத்திரிக் காலமென்னும் நான்கு காலங்களிலும் ஈசுவரநாமத்தை இலட்சம் அளவாக வேனும் அதனிலும் அதிகமாக வேனும் உச்சரித்து அதனிடத்துச் சித்தவிருத்தியை நிறுத்தல் வேண்டும் இவ்வாறு செய்யுமிடத்துத்தான் பத்தி உறுதிப்படும் இவ்வாறனுஷ்டிக்குமிடத்து மலமும் விட்சேபமும் விரைந்தொழியும்.

இப்பத்தியானது பத்தியென்றும் பிரபத்தியென்றும் இருவகைத்தாம் பத்தியென்பது பெரும்பான்மையாகக் காமியமாகவும், நிஷ்காமியமாகவும் இருக்கும் பிரபத்தியென்பது நிஷ்காமியமாகவேயிருக்கும் பத்தியாவது சாஸ்திரங்களிற் கூறியவாறு ஈசுவரனைப் பஜித்தலாம் பிரபத்தியாவது சகலதருமங்களையும் விட்டு ஈசுவரனையே புகலிடமாக வடைந்து, தனக்கெனச் சுதந்தர மென்பதின்றிப் பஜித்தலாம் இன்னுமிப்பத்தி பலவிதமாகவும் இருக்கும்.

1 அருளுடைமை, 2 புலால்மறுத்தல், 3 தவம் 4 கூடா வொழுக்கமின்மை, 5 கள்ளாமை, 6 வாய்மை, 7 வெகுளாமை, 8 இன்னாசெய்யாமை 9 கொல்லாமை,

1. அருளுடைமை தொடர்புபற்றாது இயல்பாக எல்லா வுயிர்களின்மேலும் செல்வதாகிய கருணை.

2. புலால்மறுத்தல் மாமிசம் புசித்தலைப்பிரயத்தன பூர்வமாகவொழித்தல்.

3. தவம்:—மனம் பொறிவழி போகாது நிற்றற்பொருட்டு விரதங்களால் உண்டி சுருக்கல் முதலானவை.

4. கூடா வொழுக்கமின்மை:—விபசாரமுதலிய தீயவொழுக்கங்களில்லாமை.

5. கள்ளாமை:—பிறருடைமையாயிருப்பதி யாதொரு பொருளையும் அவரை வஞ்சித்துக்கொள்ளக்கருதாமை.

6. வாய்மை:—உயிர்க்குறுதியைத்தரும் வார்த்தை பேசுதல்.

7. வெகுளாமை:—சினஞ் செய்வதற்கேதுவொருவனிடத் துண்டாகிய விடத்தும் அதனைச்செய்யாமை.

8. இன்னாசெய்யாமை:—பயனோக்கியாவது கோபம் பற்றியாவது சோர்புபற்றியாவது ஒருயிர்க்குத் துன்பந் தருவன வற்றைச்செய்யாமை.

9. கொல்லாமை:— பிராணிகளை மறந்தும் கொல்லுதலைச் செய்யாமை.

இன்னுமித்தியாதி ஒழுக்கங்களோடு நின்று பத்திபுரிந்தால் மேலும் மேலும் அன்புண்டாம்.

நவவிதபத்தி.

1. சிரவணம்:—கடவுளின் அனந்தகல்யாண குணங்களைக்கேட்டுச் சந்தோஷித்தல்.

2. கீர்த்தனம்:—சுரஸாயித்தியாதிகளோடு கடவுள் குணாநுபூதிகளைப்பாடுதல்.

3. ஸ்மரணம்:—பகவானுடைய அனந்த திருநாமங்களைச் சதாஜபித்தல்.

4. பாதசேவனம்;—பகவானுடைய திருவடிக்கமலங்களைச் சேவித்தல்.

5. அர்ச்சனம்:—கடவுளுடைய திருவடிகளிற் பத்திரபுஷ்பாதிகளாற் பூசித்தல்.

6. வந்தனம்:—பகவானைச் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்தல்.

7. தாசபாவம்:—சதா தாசபூதனாயிருத்தல்.

8. சகாபாவம்:—கடவுளிடத்துச் சிநேகம் பாராட்டியிருத்தல்.

9. ஆத்மநிவேதனம்:—தேகாதி யாவற்றையும்கடவுளுக்குச் சமர்ப்பித்தல்.

பாடுதுறை.

என்னரசனென்னப்ப னெம்பெருமா னென்றென்று
நின்னரியபொன்னடிக்கே நின்றிறைஞ்சி யுன்னரிய
ஈசனேயெந்தையே யாவர்க்குங்காண்பரிய
தேசனேயென்றென்று செப்புவார்-நேசமொடென்

பாதம்பணிவார் பரம்பரனே யென்றிசைப்பார்
வாதங்கட்கெட்டாத வாழ்வென்பார்-போதத்தா
லாய்தற்கரிய வறிவென்பாரெண்ணவலங்
காய்தற்குத்தோன்றாக் கனவென்பார்-மாய்தற்கே
வல்லேனை மாளா வகைகாக்க மண்ணில்வரு
நல்லோனேயென்று நலங்கிளப்பார்-பல்லுயிர்க்குங்
கோன்றானேயென்பார் குருபரனாய் வீடருளுஞ்
சான்றோனேயென்று சதுரழிவார்-தோன்றுபெருஞ்
சோதியேயென்பார் கருபாணந்தாவென்பா
ராதியேயென்பா ரகமகிழ்வார்-நீதியழிற்
தார்ப்பாராற்றுவா ராலிப்பார்கோலத்தைப்
பார்ப்பார்மலர்ப்பாதம் பற்றுவார்-வேர்ப்பார்
விழுவார்தொழுதெழுவார் விம்முவார்விம்மி
யழுவார்திசயிப்பா ராவார்-வழுவாம
லிப்படியேயெப்பிறப்பு மாளிலெழில்வீடாஞ்
செப்பதமுந்தீதென்று செப்புவா-ரெப்பொழுதும்
போற்றுவார்நல்லபுகழ்மாலை கொண்டடிமே
லேற்றுவாரென்செயலே மென்றுரைப்பா ராற்றே
முடையானேயென்பாருரை மறப்பார்யார்க்குங்
கிடையானே யென்றுகிளப்பார்-கடையேனைத்
தொண்டாகக்கொண்டருளுந் தூயோனே-நாயடியேன்
கண்டானேயென்று களித்திடுவார்-கொண்டுகொண்
டேத்துவார்கும்பிடுவா ரெந்தாய்நின் கோலத்தைப்
பார்த்துவாழ்வார்நின் பழவடியார்-நாத்தழும்பப்
போற்றுமருட் புலையேனையும்வைத்துச்
சீர்த்ததிருமேனித் திறங்காட்டிச்-சாற்றுமறை
நாடும்பரமபொருளாய் நான்றெளிந்து பத்தியுடன்
பாடும்பரிசுபணித்தருளித்-தேடுகின்ற
விண்ணோர்கள்புண்ணிய நீர்மெய்விரும்பா தென்னுடைய

கண்ணீராமஞ்சனமே காதலித்துப்-பண்ணுரும்
வேதமுதல்வெவ்வேறு பேற்றிசைத்த மெய்மாலை
பாதமணியாதிப் பாரதனி-லாதமிலி
நாயேனையீயாக்கி நாளேனுதும் பாமாலை
யாயாமலாதனத்தோ டாங்கணிந்து-தேயமெலா
மாக்குந்திருப்போனக மமுது செய்யாதென்
றுக்குமுயிரையமுதாக்கி-நீக்கின்றி
நின்றாயினுநினையே னெஞ்சுருகே னுள்ளழியே
னுன்றாள்பணியும் வகையுணரே-னென்றாகப்
பாரேனுனையடியேன் பாவியேனவையமெலா
மாரேனீயாண்டவருளுரையே-னூரூர்போய்ச்
சாற்றேனகமகிழேன் சம்பிரமத்தினபாதம்
போற்றேனபுகழ்ந்து புகழ்ந்துரையே-னாற்றேனுன்
செய்யும்வகையறியேன தீவினையேன சேவடிசேர்ந்
துய்யும்வகையருளா யுத்தமனே-பொய்யனறி
மெய்யேனானசெய்கின்ற விண்ணப்பங்கேட்டருளி
யையேயருள வதுவேண்டேன்-றுய்யதிருப்
பாதந்தொழவெனகை பார்மிசைமேல் வந்தாண்ட
நாதனறனைத்துதிக்க நாமனமுங் கேதமறச்
சிந்திக்கவினனருளைச் செய்யதிருமேனியைக்கண்
பந்திக்கவென புனறலைபரனை வந்திக்க
வெனதுமுரைப்ப வெழிலடியார் யானதனி
லொனதுமுரைக்கவுளத் தெண்ணேன் பொன்றுங்
கடையெலாங்காய்பசியை யஞ்சுதலா னுயேன்
விடயமேமெய் விரும்பலுற்றேன் கொடுவினையேன்
மாயவிடயத்தே மயங்காவகையருள
தீயதெளிற்சமிக்கச் செய்தருளல் காயந்தான்
வீயவருளல்விரும்படியார் சிந்தையகத்
தூயபெரும்பத்தி யாங்கருள னீயருளிச்

செய்யர்தொழிதியேற் றீவினையேனை போய்நரகக்
கையாவொருவனென்ன வைமைவேன் வையகத்தா
ருன்னடியேனேதேனு மாளுனையிகழ்வா
ரென்னுடையதீநெஞ்சை யாரறிவார் பொன்னடியன்
கூடும்பரிசு குறித்தருளி மற்றவைகொண்
டாடும்பரிசெனக்கு மன்பருளிக் கோமெனன
போகுந்திரமருளிப் புண்ணியனே நின்னுருவே
யாகுந்திரனே யருள்.

## பத்தியுடைமை.

பத்தியாலுள்ளே பரிந்தரனைத்தானோக்கில்
முதநிக்குமூலமது
பாடியுமாடியும் பல்காலுநேசித்துத்
தேடுஞ்சிவசிந்தையால்
அன்பாலழுது மலறியுமாள்வானை
யென்புருகியுள்ளேநினை
பூசனைசெய்து புகழ்ந்து மனங்கூர்ந்து
நேசத்தாலீசனைத்தேடு
கண்ணாலுறப்பார்த்துக் காதலாற்றுனோக்கில்
உண்ணுமே யீசனொளி
நல்லானைப்பூசித்து நாதனெனவுருகில்
நில்லாதோ வீசனிலை
அடியார்க்கடியரா யன்புருகித்தம்பிரான்
படியொன்றிப் பார்த்துக்கொளல்
ஈசனெனக்கருதி யெல்லாவுயிர்களையும்
நேசத்தால் நீநினைந்துகொள்

மெய்ம்மயிர்கூர விதிர்ப்புற்றுவேர்த்தெழுந்து
பொய்ம்மையி லீசனைப் போற்று
செறிந்தறிந்துநாடியே செவ்விதாயுள்ளே
அறிந்தரனை யாய்ந்துகொளல்.

### அஷ்டவிதப்புஷ்பங்கள்.

1 அஹிம்சை, 2 இந்திரிய நிக்கிரகம், 3 ஜீவகாருண்யம், 4 பொறை, 5 தபசு, 6, தியானம், 7 சாந்தி, 8 பொய்யாமை என்னும் அஷ்டவித புஷ்பங்களைக்கொண்டு பூசிக்கிறதே மேலான பூசையாம் இதனையே கடவுள் பிரீதியாகக்கொள்வர்.

### ஈசுரகீதை.

விரிந்ததிங்கெவனால் விண்முதற்பொருள்
பெருந்தகையாமவன் பெருமைபேசிடப்
பரந்தெழுசிந்தையை யொருக்கிப்பத்தியால்
அருந்தவர்கேண்மினென் றருளிச்செய்குவான்.

### வேறு.

சகத்துளோர்யாவர்க்குஞ் சான்றாகியானென்று
மகத்துளேநின்றாலும் பழகியபத்தியன்றி
மகத்தினாற்றானத்தான் மாதவத்தான்மற்றுமொரு
முகத்தினாலொருவற்கு முன்னிற்குமவனல்லேன்

### வேறு.

கலையாளர்யாவரினுங் காயாதல்மலராதல்
இலையாதல்நீராதல் என்றதுகொண்டென்பாலே
நிலையாயபத்தியினால் நித்தமெனைவழிபடுவான்
தலையாயவன்பனெனக் கியாவரினுந்தானினியான்.

வேறு.

பொய்யில்பத்தியால்துறவால் போதம்பொருந்தும்புத்தியினை
செய்யும்பூசையேபூசை செய்யுந்தொழில்களெல்லாம்விட்டில்
டைபம்பண்ணியுண்டொன்றுமாசைப்படாதாரெனையடையு
முய்யும்பரிசமறைந்தே யாருநேங்கட்கிரங்கியுரைத்தனனால்

வேறு.

கந்தநன்மலர்கொடு காயபூசனை
வந்தனைசெயல்புகழ் வாக்கின்பூசனை
பந்தனையறமனம் பத்தியாற்செயும்
சிந்தனைநியமமுஞ் சிவன்றன்பூசையே.

வேறு.

என்னையேநினைந் தெனைப்பணிந்தெனையருச்சித்தென்
றன்னையேயறிந்தவ னெனையன்றியேசாரான்
பின்னியாதுமப்பெருந்தகை யிருந்திடந்தனிலென்
சென்னியாற்சுமந்தவற்கு வேண்டுவதுசெய்குவனால்

இயமாதிகள்:—இயமம், நியமம், ஆசனம் பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என்பன இவற்றுள் இயமம், கொல்லாமை, மெய்ம்மைகூறல், திருடாமை, பிறர்பொருட் கண் ஆசையில்லாமை இந்திரியங்களை யடக்கலாம்.

நியமம், தவம், சவுசம், (உடலைநீரினாலும்) மனத்தைச்சத்தியத்தினாலுந், தூய்மையாக்கல் (ஆம்) ஆசனம், சுகமும், திடமும். எவ்வாறிருக்குமோ அவ்வாறிருத்தல் இது சுகாசனமென்னப்படும் இவ்வாசனம் இன்னும் பலவகைப்பட்டிருக்கும்.

பிராணாயாமம், (ரேசகம்) வாயுவை மூக்கின் வலதுதுவாரத்தால் விடுதல், (பூரகம்) வாயுவைமூக்கின் இடதுதுவாரவாயிலாக உள்ளுக்கிழுத்தல் (கும்பகம்) வாயுவை உள்ளே அடக்குதல் ஆம்.

பிரத்தியாகாரம் விஷயங்களிற் செல்லாவண்ணம் சகல இந்திரியங்களையுந்தடுத்து உண்ணோக்கியிருத்தலாம்.

தாரணை. தயிலதாரைபோன்று இடைவிடாது அந்தக்கரணத்தினை யாதானும் ஒருலட்சியத்தில் வைத்தலாம்.

தியானம். கடவுளிடத்து விட்டுவிட்டுச்செல்லும் அந்தக்கரணத்தின் பிரபாகமாம்.

சமாதி. உண்டாயிருக்கும் வாசனைகளின் ஒளியும் அடங்கியிருக்கும் சமஸ்காரங்களின் வெளிப்பாடும் உண்டாகி அந்தக்கரணம் ஒருமுகமாய்ப் பரிணமித்திருத்தலாம்.

இயமம் பத்துவகைப்படுமென்பதூஉம் நியமம் பத்துவகைப்படுமென்பதூஉம் ஆசனம் எண்பத்துநான்குவகைப்படுமென்பதூஉம், பிராணாயாமம் இருவகைப்படுமென்பதூஉம் பிறவுமாகிய இவற்றின் விரிவெல்லாம் விரிந்தநூலிற் கண்டுகொள்க.

இதுகாறும் கூறியகன்மம் பத்தியில் சரியையாதிமூன்றும் அந்தர்ப்பூதமா மென்பதைச் சமனோக்கோடு உற்று நோக்குவார்க்கு இயல்பும் நன்றேயாம் என்றருள,

சீடன்:—வேதசாரமாயுள்ள ஞானத்தினைத் திருவாய் மலர்ந்தருள்க வென்ன.

ஆசிரியர்:—அநாதிதொட்டு அஞ்ஞான பூமிகளிற் றொடக்குண்டு ஜெனனமரணப்படும் ஜீவர்களில், ஒருவன் நிஷ்காமகன்ம உபாசனைகளால் மலவிக்ஷேப நிவர்த்தியும் சித்தசுத்தியும் ஏகாக்ரத்தன்மையும் நித்தியா நித்திய வஸ்து விவேகம் இகமுத்திரார்த்த பரபோக விராகம் சமாதி சட்சம்பத்தி மும்முக்ஷத்துவம் என்னு நான்கு சாதனமும் உடைத்தாகி பரமான்மாவை அறியவேண்டுமென்றுண்டாகும் தீவிர இச்சை சுபேச்சை என்னும் ஞானத்தின் முதற்பூமியையும் சீவகாருண்ணியம் ஈசுரபக்தி பாசவைராக்கியம் பிரமத்தியானம் என்னும் இந்நான்குமே ஓர் திருமேனிகொண் டெழுந்தருளிய சற்குருநாதனை விதிபூர்வகமாகச் சரணடைந்து அவர்முகமாக அறிவானந்த ஐக்கியத்தை அறிவிக்கும் வேதாந்த மகாவாக்கியத்தை சிரவணஞ்செய்து அந்த அர்த்தம் தன் மனதில் பதியும்பொருட்டு அனேகயுத்திகளால் மனன (விசாரம்) செய்தல் விசாரணையென்னும் ஞானத்தின் இரண்டாம் பூமியையும் அபரோக்ஷானுபவத்தின்பொருட்டு சிரவணமனனவாயிலாக நிச்சயிக்கப்பட்ட அறிவானந்த ஐக்கியமாகிய அர்த்தத்தை இடைவிடாமல் சிந்திக்கலாகிய நிதித்தியா சனத்தால் ஸ்தூல (பகிர்முகமாகிய) மனத்திற்கு சூக்ஷமத்து

ன்மை (அந்தர்முகத்துவம்) உண்டாதல் தனுமானசியென்னும் ஞானத்தின் மூன்றாம் பூமியையும் சிரவண மனன நிதித்தியாசனங்களால் சமுசய விபரீதங்களில்லாத சொரூப சாக்ஷாத்காரமாகிய நிர்விகற்ப ஸ்திதி உண்டாவதினால் சித்தித்தல் யாதொரு சுத்தசத்துவ குணத்தின் அல்லது சொரூபசத்தையின் அடைவு உண்டாகாநின்ற சத்வாபத்தியென்னும் ஞானத்தின் நான்காம் பூமியை எய்தினவனே பிரமவித்தாவான் என்பனவாம்.

ஞானத்திற்கு முன் உபாசனை பூரணமாகச்செய்தவன் செய்யாதவன் என்னும் பேதத்தால் நான்காம் பூமியாகிய ஞானத்திற் கதிகாரிகள் இரண்டுவகையாவர் அவர்களுள் முன் உபாசனை செய்யாத அகிருதோபாசனனிடத்தில் எல்லாசாதனங்களும் வெளிப்படையாகத் தோன்றுகிறதில்லை ஆனால் ஒன்றிரண்டு வெளிப்படையாகவும்மற்றவை மறைவாகவுமிருக்கும் ஆகையால் அவன் அறிவுடையவனாயிருந்தால் நான்காம்பூமியாகிய தத்துவஞானத்தை அடைகின்றான் ஆனால் வெகுகால அப்பியாசத்தால் எப்போதாவது ஐந்தாவது முதலியவேதேனும் ஓர் பூமியில் ஆரூடனாகின்றான் சீக்கிரத்திலாகிறதில்லை முன்உபாசனைசெய்த கிருதோபாசனன் நல்வைராக்கியாதி சாதனங்களோடு கூடி நிருவிகற்ப சமாதியினது அப்பியாசத்தின் பரிபக்குவத்தால் தேகத்தில் எல்லாவிதத்தாலும் அகந்தை மமதைகள் சோர்ந்து தேகமுதலியவற்றில்

எவ்விதத்தாலும் பிரியமுண்டாகாதிருத்தல் அசம்சத்தி என்னும் ஞானத்தின் ஐந்தாம்பூமியை யெய்தி பிரமவாரனென்னும் பெயர்பெற்று பின் நிருவிகற்ப சமாதியின் மிருந்த அப்பியாசத்தால் தேகமுதலிய சகலபதார்த்தங்களுக்கும் அதிஷ்டான அறிவானந்த ரூபமாகத்தோன்றுதலால் யாதொரு அபாவம் (அப்பிரீதி) உண்டாகிறதோ அதுபதார்த்தாபாவினி யென்னும் ஞானத்தின் ஆறாவது பூமியை யெய்தி பிரமவரியானென்னும் பெயர்பெற்றமேல் ஞாதுருஞான ஞேயமாகிய திருபுடி நான்காம் ஐந்தாம் பூமிகளைப்போல பாவரூபமாகவும் ஆறும் பூமியைப்போல் அபாவரூபமாகவும் எங்கே தோற்றவில்லையோ அப்படிப்பட்டதன்றேனும் பிறராலும் எழுதவில்லாத துரியமே துரியாதீதம் என்னும் துரியபதத்திலுள்ள மனத்தினிலை துரியமென்னு ஞானத்தின் ஏழாம் பூமியினை யெய்தி பிரமவரிட்டன் அடைந்த வேதமுடிவாகிய மோனிலையினையே சகலவேதாகமபுராண இதிகாசம் அனைத்தும் கங்குல்பகலற்றவிடமே, மெய்ப்பொருளென்றும், இராப்பகலற்றவிடமே நமக்கிடமென்றும் சகலகேவல மற்றவிடமே சுத்தஞான வெளியென்றும், நினைப்பு மறப்புஅற்ற இடத்தில் நித்திரை செய்யவேண்டுமென்றும், அறிவறியாமை அற்றதனிப்பொருளில் தூங்கவேண்டுமென்றும், ஏத்தெடுத்திறைஞ்சி நின்மலதுரியாதீத மெனவும், மத்தியநதமெனவும், பேச்சற்றவிடம் எனவும், பேசாவனு

பூதியெனவும், கற்பனையற்ற விடமெனவும், மனோ வாக்குக்காயங்களால், எட்டரிதாம் எனவும், தேடுதல் அற்றவிடமெனவும், மவுனநிலையெனவும், இரகசியமெனவும், சிதாகாயமெனவும், சுட்டுதலற்றவிடமெனவும், குருதுரியமெனவும் திருச்சிற்றம்பலமெனவும் இன்னும் இவைபோன்றநாமங்களினாலே துதித்துப் புகழ்கின்றன வென்றருள.

சீடன்:—இங்ஙனம் இத்துரிய நிலையினை, வேதாகமபுராண விதிகாசங்கள் இவ்வாறு பலநாமங்களாகப் புகழ்கின்றன வென்பதற்குப் பிரமாணமுளவோவென்ன.

ஆசிரியர்:—கீழ்வருவனவே.

தாயுமானசுவாமிகள்.

அங்கிங்கெனாதபடி யெங்கும்ப்ரகாசமா
யானந்தபூர்த்தியாகி
யருளொடுநிறைந்ததெது தன்னருள்வெளிக்குளே
யகிலாண்டகோடியெல்லாந்
தங்கும்படிக்கிச்சை வைத்துயிர்க்குயிராய்த்
தழைத்ததெதுமனவாக்கினிற்
றட்டாமனின்றதெது சமயகோடிகளெலாந்
தந்தெய்வமெந்தெய்வமென்
றெங்குந்தொடர்ந்தெதிர் வழக்கிடவுநின்றதெது
வெங்கணும்பெருவழக்கா
யாதினும்வல்லவொரு சித்தாகியின்பமா
யென்றைக்குமுள்ளதெதுமேற்

கங்குல்பகலறநின்ற வெல்லையுளதெதுவது
கருத்திற்கிசைந்ததுவே
கண்டனவெலாமோன வுருவெளியதாகவுங்
கருதியஞ்சலிசெய்குவாம்.

பெருவெளியாயைம்பூதம் பிறப்பிடமாய்ப்பேசாத
பெரியமோனம்
வருமிடமாய்மனமாதிக்கெட்டாதபேரின்ப
மயமாய்ஞானக்
குருவருளாற்காட்டிடவு மன்பரைக்கோத்தறவிழு
கொண்டப்பாலுந் [ங்கிக்
தெரிவரிதாய்க் கலந்ததெந்தப் பொருளந்தப் பொ
சிந்தைசெய்வாம். [ருளினையாஞ்

இகபரமுமுயிர்க்குயிரை யானெனதற்றவருறவை
யெந்நாளுஞ்
சுகபரிபூரணமான நிராலம்பகோசரத்தைத்
துரியவாழ்வை
யகமகிழவருந்தேனை முக்கனியைக்கற்கண்டை
யமிர்தைநாடி. [ர்கண்
மொருமொகெனவிருவிழிநீர் முத்திறைப்பக்கரமல
முகிழ்த்துநிற்பாம்.

சாதிகுலம்பிறப்பிறப்புப் பந்தமுத்தியருவுருவத்
தன்மைநாம
மேதுமின்றி யெப்பொருட்கு மெவ்விடத்தும்
பிரிவறநின் றியக்கஞ்செய்யுஞ்

சோதியைமாத்தூவெளியை மனாதீதநிறைவான
துரியவாழ்வைத்
தீதில்பரமாம்பொருளைத் திருவருளோநினைவாகச்
சிந்தைசெய்வாம்.

அருமறையின்சிரப்பொருளாய் விண்ணவர்மா
முனிவர்சித்த ராதியானோர்
தெரிவரியபூரணமாய்க் காரணங்கற்பனைகடந்த
செல்வமாகிக்
கருதரியமலரின்மண மெள்ளிலெண்ணெயுடலுயிர்
கலந்தெந்நாளுந் [போற்
றுரியநடுவூடிருந்த பெரியபொருளியாததனைத்
தொழுதல்செய்வாம்.

ஒன்றிரண்டாய் விவகரிக்கும் விவகாரங் கடந் தேயூராம் யோகபூமி, நின்றுதெளிந் தவர்பேசா மௌனநியா யத்தைநிறை நிறைவைத் தன்னை, யன் றியொரு பொருளிலதா வெப்பொருட்குந் தான் முதலா யசல மாகி, யென்றுமுள்ள வின்பத்தைத் தண்ணொன்ற சாந்தபத வியற்கை தன்னை.

வள்ளலார்.

பிளிறுமாதங்கப் பிரானடிவணங்குறும்
கருவியங்கயிற்றைக் கதுமெனத்துமியா
மருவினைப்பாகன் வாயின்மண்ணட்டாக்
கண்மனமறிவில் காமுகர்நுழையா
வல்பகலிரண்டினு மணுகாமுத்தி
நெடுவனம்புக்கு நிலாவுதற்பொருட்டே.

இத்துரியாதீதத்தி லிமைக்கொட்டுமளவானாலு [ங்
முற்றகண்ணாடிதன்னிலுழுந்துருள்பொழுதானாலு
கைத்தலத்தாலரவின்பால் கறக்குறுங்காலமேனுஞ்
சித்துருவாகிநிற்போர் சின்மயவீடுகாண்பார்.

வைராக்கியசதகம்.

நாலுவேதமுமொரு சமயமிலைசொல
நவைசெயீரவந்தைப்பாற்
கோலுமூவிரு சமயமாகியபடு
குழியிலாடிழிகின்றாய்
வேலையாவுனக்குடற றுவிதியுற
வையுமதைவிடுவிக்குங்
காலனார்தொடர் பையுமினற்றொடருதி
போலுநீ கடைநெஞ்சே

கண்டவைம்புலக்காட்சிபோய் காட்சியாற்
கலந்தவாதனையாவும்
விண்டொழூடமற் றலையிலாக்கடலென
விளங்கினையெனினெஞ்சே
யுண்டுகொன்னமக் கொருதுயராங்குவி
ளங்கையிற் கனியேயாம்
பண்டைமேவிய பயமெலாமறுங்குரு
பதத்தினும்புகலாமே

மறைத்துனாபினைத்தனுஞ் செயுமாணவ
மாயையின்றவைதம்மைத்
தீர்த்தலேயிராப்பக லகல்வீடெனச்
சொல்வரத்துறவெய்தக்

றுதித்திடற்பரபக்தி ஞானத்திறற்
கூடுமற்றவைநெஞ்சே
நிறத்தபத்திரஞ்செய லறிஞமறி
னின்றமற்றென்றுமே.

## கைவல்லியம்.

பொன்னிலமாதராசை பொருந்தினர் பொருந்தாருள்ளந்
தன்னிலந்தரத்திற்சீவ சாக்ஷிமாத்திரமாய்நிற்கும்
என்னிலங்களினுமிக்க வெழுநிலமவற்றின்மேலா
நன்னிலமருவுமேக நாயகன்பதங்கள்போற்றி

முப்புவிமூன்றினு மூவகைத்தோன்றுதலாற் சாக்கிரமாம் மூன்றதற்கப்பாற், சொற்பனமாமதுவுமெல்ல நழுவுமஞ்சாம் பூமியே சுழுத்தியாகு, மற்புதமாஞ் சுவாலுபவ யிருமாறும்பு லிதுரியமதற்கப்பாலோர், கற்பனையில்லாதவிட மதீதமென் றுமவனமாக்காட்டும்வேதம்.

## மகாவாக்கியம்.

சோபாதகத்தோற்றுகின்ற துவிதமறத்தொழியாதகிட்டை கூட, லாராலுமறியவொண்ணு வத்துவித முங்கடந்தங்கப்பா லேதாஞ், சாராதசொச்சொரூப மாத்திரமாயிருந்தலது சாட்சாத்காரம், ஆராதிதாரமெனநான்மறையின் முடிவுரைக்குந் தொன்மையாமே.

## ஞானவாசிட்டம்.

நிருவிகற்பசமாதியிலே நிகழ்சித்திரம்போனிலைபெற்று
வருடமையாயிரஞ்செல்ல மாறுவொருபார்வையினிற்ப்
வருணமணிசூழ்பாதலத்தி லரசிலாமலசுரரொலாங்
கருடன்முதற்புள்ளினங்கவாக்கலங்குருளமீனினமொத்தாற்

ஆனவாதனைகளின்றி யசைவற்றுப்போனாகி
மோனமாய்நிருவிகற்பமாய்ப் பற்றுமுற்றுமற்று [ன்
தானேமயமூர்த்திக்கற்போற்றருணைப்போற்சுவர்போனின்று
போனசூடாலைபண்டைப் பொற்கொடிவடிவமெய்தி

கண்டநனவுகோரமதாம் கனவுசாந்தமெனப்பெயராம்
கொண்டசுழுத்தி மூடமதாங் கூறுமிம்மூன்றவத்தைகளும்
விண்டமனத்தின்வடிவாகும்விளம்புமிம்மூன்றையும்விட்டா
றண்டமனம்போமனமிறந்தாற் சத்தாயொன்றாஞ்சமநிலையாம்

அந்தநிலையேயோகிகடா மறிதற்சாதித்தடைகின்றார்
வெந்ததுயர்செய்சங்கற்ப விகற்பமில்லாத்துரியத்தே
மைந்தநிலையாயிடர்தீர்வாய் மகத்தாயுயர்ந்தமுனிவராய் [ர்
பந்தமிலராய்ப்பேதமறும்பழையோர்விடாதிப்பதத்துறைவா

## சுகர்கைவல்லியம்.

அன்னவுரைகேட்ட சுகமுனிவனுள்ளத்
தக்கணத்தில்மெஞ்ஞான வருக்கன்றோன்ற
முன்னமலதிமிரமறப் பாசபந்த
மும்மாயையிருட்டகன்று மோகநீங்கி
மன்னுசரற்காலவிண்போல் மாசிலாமல்
மனந்தெளியவிதையமுறு வனசம்பூப்பத்
தின்னுபரஞ்சோதியெங்குந் தானாய்த்தோன்றத்
தூய்மலர்க்கண்முகிழ்த்திமையாத்தோற்றமானான்.

அன்னநிலையாயிரமாந் தெய்வவாண்டங்
ககலாமல்சனகனரியணையின்மீதே
தன்னிலையோடிருந்து மனமசைவுறாமற்
சகலகேவலங்களற்றுத் தறிபோலாகி

இந்நிலையாநிர்விகற்ப சமாதிதன்னி
லிருந்துதானெடுங்கால மேகாந்தத்தின்
நன்னிலையாஞ்சுகாதனத்திற் றற்சொரூப
நண்ணியிருந்திமையாத நாட்டமானான்.

அரிதான பரமார்த்தப் பொருள்வேதாந்த
வகண்டபரிபூரண சச்சிதானந்தத்தின்
பெரிதானவாத்தும தத்துவமாய்நின்று
பிரியாததுரியபதப் பேதநீங்கிப்
புரிதானமாய்விளங்குஞ் சிற்சொரூப
பூரணானந்தமுதப் போதந்தன்னைப்
பரிதானமாகவுண்டு சுகாநந்தத்திற்
பரஞ்சோதிவடிவமுற்றன் சுபாவமானான்.

அத்தகையாயிரமருவந் தெய்வவாண்டங்
கழன்றதற்பின் மெஞ்ஞானவருக்கனீங்கி
வித்தகமாஞ்சமாதிவிட்டு யோகநீங்கி
விழிதிறந்தான் சுகமுனிவன் வேந்தன்கண்டு
சித்தமகிழ்ந்தடியிணையி லிறைஞ்சியேத்தத்
திகழ்முனிவன் முகநோக்கிச் சிந்தைகூரப்
புத்தமுதவாரியென வினியநன்சொல்
பொழிந்திடுவான் சுகமுனிவன் புகல்கின்றானே.

## திருவாய்மொழி.

நன்றாய்ஞானம் கடந்துபோய் நல்லிந்திரியமெல்லாமீர்த்து, ஒன்றாய்க்கிடந்தவரும்பெரும்பாழுலப்பிலதனையுணர்ந்துணர்ந்து, சென்றாங்கின்பதுன்பங்கள் செற்றுக்களைந்துபசையற்றால், அன்றேயப்போதே வீடதுவே வீடுவீடாமே.

## திருவிளையாடற் புராணம்.

கரவிலுள்ளமாம் விசும்பிடைக்காசறவிளங்கும்
பரசிவாச்சுடர்க் குதயமீறின்மையாற்பகலு
மிரவுநேர்படக் கண்டிவரியன்றுசெய்திடுத
விரதமாதிநோன் பிழந்துறைவிஞ்சையர்பலரால்

உடையுங்கோவண முண்டியுங்கைப்பலி யுநவென்
றடையுங்கேளிரு மானடியார்கண்டிகலன்கண்
படையும்பாரிடமாயினும் பகலிரா முதலீ
றிடையின்றுமிடத்துறங்கு வதிஃதவர்வாழ்க்கை.

இன்னும் இப்படி அனேக சுருதிப்பிரம
ம் உண்டென்று திருவாய்மலர்ந்தருள.

சீடன்:—துரியசிவம் மனோவாக்குக் காண
ளாலும் நாடற்கரிய பரமானந்தப்பரங்கடலாய்
ளங்காகிற்க அன்பர்கள் பொருட்டு பலதிறத்
வாகி அருளுருக்கொண்டு வந்தனவாக வேதா
புராண இதிகாசமனைத்தும் உரைக்கின்றன
அதன் விர்த்தாந்த மென்னோ திருவாய் மலர்ந்
ளுக வென்றிரங்க.

ஆசிரியர்:—அருட்பெருஞ்சோதித் தனிப்
ருங்கடலாகிய துரியசிவத்தின் திருவருட்சத்தி
னே வேண்டுவார் வேண்டும்வண்ணம் அருளுரு
கொண்டு திருவிளையாடல்செய்யும் பெருங்கரு
யை யாம் எடுத்துப் புகழுந்தரத்தனவோ வெ
றருள.

சீடன்:—இதற்குப் பிரமாணம் உளவோ.

ஆசிரியர்:—கீழ்வருவனவே.

### மோகவதைப்பரணி.

முடிவுமாதியு மற்றமுழுமுதல்
வடிவமாகிவரும்படி யெங்ஙனே.

சொல்லுகோலஞ் சுருதிவிருத்தமோ
வல்லவோவென வன்னையருளுமே.

அருவனாயினு மன்பர்க்குருவனாய்
வருவனென்பது மாமறைசொல்லுமே.

பத்தியாம்வலையிற் படும்பார்மிசை
புத்தியாலறியொண்ணாப் புராணனே.

தேவியிப்படிக் கூறத்திருவருள்
பாவியேற்கில தென்றபதைக்கவே.

### பெரியபுராணம்.

காதிலணிகண்டிகை வடிந்தகுழைதாழச்
சோதிமணிமார்பினசை நூலினொடுதோளின்
மீதுபுனையுத்தரிய வெண்டுகிலுடங்க
வாதபமறைக்குடை யணிக்கரம்விளங்க.
பண்டிசரிகோவண வுடைப்பழமைகூர
கொண்டதொர்சழங்கலுடையார்ந் தழகுகொள்ள
வெண்டுகிலுடன்குசை முடிந்துவிடுவேணுத்
தண்டொருகைகொண்டு கழறள்ளுநடைகொள்ள:

மொய்த்துவளர்பேரழகு மூத்தவடிவேயோ
வத்தகையமூப்பெனு மதன்படிவமேயோ
மெய்த்தநெறிவைதிகம் விளைந்தமுதலேயோ
வித்தகவேடமென வையமுறவெய்தி,

வந்து திருமாமறை மணத்தொழிற்குடங்கும்
பந்தரிடைநம்பியெதிர் பன்னுசபைமுன்னின்
றிந்தமொழிகேண்மினெதிர் யாவர்களுமென்
முந்தைமறையாயிர மொழிந்ததிருவாயான்.

திருவாதவூரடிகள் புராணம்.

உருத்திரநற்றிருமணியை யிலங்குகாதி
லொண்சிரத்திற் கந்தரத்தி லொளிகொண்ம
கரத்திலணிந்திலகுதிரு முண்டமங்கக்
கண்கரந்தநன்னுதன்மேற் கவினச்சாத்தித்
திருத்திகழும்வேதியனு ரம்பொன்மேனி
திகழ்வதுகண்டகமகிழ்வார் செங்கைமீது
பொருத்தமுறும்புத்தகமே தையாவென்னப்
பொய்மையிலாச்சிவஞான போதமென்றார்.

என்றலுமேசிவமேது ஞானமேதங்
கிலங்கியிடும்போதமே தியம்புவீரே
லன்றவடநீழலில்வந் திருந்தார்நீரே
யடியேனுமுமக்கடிமை யாவேனென்ன
நின்றசிவமொன்றதனைத் தேர்தன்ஞான
நிகழ்போதந்தேர்ந்ததனைத் தெளிதலாமென்
றொன்றியநற்பொருள்வினவி நிற்பார்சிந்தை
யுருகும்வகையுரைசெய்தா ருவமையில்லார்.

வேறு.

உத்தமரின்னவாறிங்குரைத்தலு முவந்துஞான
சத்திநிபாதமெய்துந் தன்மையராதலாலே
யத்திருமன்றுளாடு மையரிங்கென்னையாள
வித்திருமேனிகொண்டா ரென்பதுமனத்தி

## பிட்டுக்கு மண்சுமந்த படலம்

இன்றெனக்குறுதியாகி யானிடம்பிட்டுவாங்கி
வன்றிறற்கூலியாளாய் வன்கரையடைப்பாரில்லை
யுன்றனைக்கபயம்யானென்றுரைப்பவடன்மேலன்பு
சென்றவட்காளாமாறு துணிந்தனர்தேவதேவர்.

ஆடையுந்துணிந்தசீரை யாகியேகூலியாளாய்க்
கூடையுந்தலைமேல்கொண்டு கொட்டுடைத்தோளராகிப்
பீடைகொண்டவர்வாள்காணப்பெரும்பசியுடையார்போல்
வேடைகொண்டொல்லைவந்தார்வேண்டியவடிவங்கொள்வார்

## திருவிளையாடற்புராணம்.

கடியகானகம்புகுந்தவோ கட்டியவிறகை
முடியிலேற்றவோ முண்டகத்தாள்கணொந்திடவந்
தடியனேன்பொருட்டடாதசொற்பகரவோவஞ்சக்
கொடியனேன்குறை யிரந்தவாவிளைந்ததேகுற்றம்.

நெடியனேமுதல்வானவர் நெஞ்சமுஞ்சுருதி
முடியனேகமுங்கடந்த நின்முண்டகப்பாதஞ்
செடியனேன்பொருட்டாகவிச்சேணிலந்தோய்ந்த
வடியனேற்கெளிதாயதோ வையநின்பெருமை.

நாதவந்தமுங்கடந்த மெஞ்ஞானவானந்த
போதமெய்ப்பரம் இன்றொருபுடவிமாறுடமா
யாதபக்தெறத்தறிந்த விந்தனஞ்சுமந்தடியேன்
பேதையன்பளவாயதோ பெருமநின்றூருவம்.

ஆசிரியர்:—அநாதிமுத்த சித்துருவாகிய சிவபெருமான் அநாதிமல பெத்தர்களாகிய ஆன்மாக்கள் தன் திருவடி ஞானத்தை அடைதற்பொருட்டு திருவாய்மலர்ந்தருளிய வேதாகம வழிச்சென்று தற்போதமற்று அருட்போதமுற்று ஆனந்த அநுபோகம்பெற்று நின்றமகத்துக்களுக்கு இரண்டும் ஒன்றேயென்றருள.

சீடன்:— இதற்குப்பிரமாணம் உளவோ.

ஆசிரியர்:— கீழ்வருவனவே.

### ஒழிவிலொடுக்கம்.

கயிற்றரவுங் கட்டையினிற் கள்ளனும்போன்மாயா
மயக்கமற்றவேதாந்தவாழ்வு முயற்சிகெட்ட
ஆனந்தாதீதத்தே யானவராமாகமமும்
ஞானந்தினர்க்குச்சமன்.

### தாயுமானவர்.

சந்ததமுமெனதுசெய லினதுசெயலியானெனுந்
தன்மைநினையன்றியில்லாத்
தன்மையால்வேறலேன் வேதாந்தசித்தாந்த
சமரசசுபாவமிதுவே
யிந்தநிலைதெளியநா னெக்குருகிவாடிய
வியற்கைதிருவுளமறியுமே
யித்நிலையிலேசற் றிருக்கவென்றுன்பதமையு
மிதமாருவாகவுந்தா

சித்தைகுடிகொள்ளுதே மலமாயைகன்மம்
திரும்புமோதொடுவழக்காய்ச்
சென்மம்வருமோவெனவும் யோசிக்குதேமன
சிரத்தையெனும் வாளுமுதவிப்
பந்தமறமெய்ஞ்ஞான தீரமுந்தந்தெனைப்
பாதுகாத்தருள்செய்குவாய்
பார்க்குமிடமெங்குமொரு நீக்கமறநிறைகின்
பரிபூரணானந்தமே

வாராதெலாமொழிய வருவனவெலாமெய்த
மனதுசாக்ஷியதாகவே
மருவநிலைதந்ததும் வேதாந்தசித்தாந்த
மரபுசமரசமாகவே
பூராயமாயுணர ஆசமதுதந்ததும்
பொய்யுடலைநிலையனறெனப்
போதநெறிதந்ததுஞ் சாசுவதவானந்த
போகமேவீடென்னவே
நீராளமாயுருக வுள்ளன்புதந்ததும்
நின்னதருளின்னமின்னு
நின்னையேதுணையென்ற வென்னையேகாக்க
நினைவுசற்றுண்டாகிலோ
பாராதியற்றாத மோனமேயிடைவிடாப்
பற்றாகநிற்கவருள்வாய்
பார்க்குமிடமெங்குமொரு நீக்கமறநிறைகின்
பரிபூரணானந்தமே.

## வள்ளலார்சாஸ்திரம்.

அதுவேநீயானுயென் றருமறைகள்சொல்லு
மெதிர்சிவனே நீயானுயென்னு முதுநூலும்
வேறேவேறன்றேசொல் வேதியனே விண்விசும்பும்
வேறேவேறன்றேவிளம்பு.

சைவசித்தாந்தமெல்லாந் தானவனுகிநிற்றல்
மையறுவேதசித்த மற்றதுதானேயென்ன [ரு
னுய்வகைக்கிரண்டு மொன்றென்றோதியென் னுயிர்க்குலாப
செய்தசற்குரவனீயே திருப்புலிவனத்துளானே.

### வேறு.

அறிவேசிவமெனுமாகமம் வேதங்களவ்வறிவாய்ச் [லாம்
செறியுமுனைப்பொருளென்று கொள்ளாதுகற்றெய்வமெல்
வறிதேதிரிந்தலைந்தெய்த் தொழிந்தேன் றம்மனையகத்தி
லெறிசுடர்விட்டனற்றேடுவார்போற் கச்சியேகம்பனே.

எல்லாம்சிவமெனு நான்மறையாகமமெக்கலையு
மெல்லாம்சிவமென்றெழிற்குருவாய்வந் தெடுத்திசைத்து
மெல்லாம்சிவமெனலெவ்வெவர் கோட்குமிசைந்திருந்து
மெல்லாம்சிவமெனறுணரகில்லேன் கச்சியேகம்பனே.

பொதுவியற்படலம்.

முற்றிற்று.

---



ங்கியமனதோடும்அந்திவண்ணணையர்ச்சிப்பவர்களு
மாகிய அன்பர்களொருபாலும், அர்ச்சிக்கு முறை
மையுள்ள பூசையைப்பார்க்கிலும் பெரியோர்களரு
ணூல்களாற் சொல்லப்படும் ஐம்புலன்களையுந் தந்
தமிஷ்டப்படி செல்லாமற்காக்கும் எண்ணமுடைய
சத்துக்களுக்குத் தொண்டுபுரிதலே உத்தமமெ
ன்றுஅத்தொண்டினைச்செய்பவர்களொருபாலும்,
பூசிக்குந் தொழிலைக் கொள்வதிலும் எட்டுப்பங்கு
ஈசனைத்துதித்துப் புகழ்தல் நல்லதென்று ஐம்புல
ன்களென்னும் புழுதியடங்க நிற்கத் துதிப்பவர்க
ளொருபாலும், புலன்களில் ஓடுகின்ற பெரிதான
மனம் நிற்கும்படி ஓடித்திரியும் பிராணாதி வாயுக்
களை உள்ளே பந்தனம்பண்ணுகின்ற சிவராச யோ
கியர்கள் ஒருபாலும், வேதங்களின் முடிவாயுள்ள
தத்துவமசி மஹா வாக்கியார்த்தத்தைக் கேட்டுச்
சிந்தித்துத் தெளிந்து நிஷ்டைபுரிபவர்களொரு
பாலும், மூலமல முதலியனவற்று முப்பொருளுண
ர்ந்து தற்பர நிலையிற்றானே தனித்துநிற்குந் தபோ
தனர்களொருபாலும் புடைசூழா நிற்க,

மகத்துக்கு மகத்தாகிய சிவத்திலே இரண்ட
றக்கலந்து பரமாநந்த நித்திரைசெய்பவரும், தம்
மவரென்றும் பிறரென்றும் எழுஞ்சித்த விருத்தி
யாகிய விருப்பு வெறுப்பு முற்று மற்றவராயுங், கள்
ள விந்தியங்களுக்கு முதன்மையாயிருக்கிற சீவா
ன்மாக்கள் படுகிற துன்பத்தைத் தமது திருவுள்
ளத்தினினைத்து இரக்கமெய்தி கருணைவாரியி லழு

ந்தி நிற்பவருமாகிய வொப்பற்ற சிவானந்த முனிசி
ரேட்டர் தந்தலையிற் சடாமுடியும், நுதலிற் றிரிபு
ண்டரமும், காதிற் குண்டலங்களும், கையிற் றண்
டக மண்டல செபமாலைகளும், மார்பின் யக்ஞோப
வீதமும், மேலும் யோகப்பட்டையும், காஷாயமுந்
தரித்தவரா யோர் புலியாசனத்திற் பத்மாசனமிட்
டுச் சிவயோகத் திருக்கோலமா யெழுந்தருளியிரு
ப்பதைக்கண்டு, ஓர் குடும்பியானவன் சன்மாந்தரப்
புண்ணியப்பயனால் நல்லறிவு தலைப்பட்டவனாய்க்
கிஞ்சிற்றறியாமை நீங்கிப் பாவத்திற்குப் பயந்தவ
னாய் தனக்கு நேர்ந்துள்ள குட்டநோயைச் சிந்தி
த்துக் கவலைதோன்றியவனாய் அம்முனிவரது சந்நி
தியில் வந்து அவரது அழகிய நல்ல பாதகமலங்க
ளில் அடியற்றமரம்போல வீழ்ந்தெழுந்து கைக
ட்டி வாய்பொத்திக் கீழ்வருமாறு விண்ணப்பித்துக்
கொள்ளுகின்றனன்.

சீடன்:—சுவாமி! அடியேன்பிறந்த நாள்முத
லின்றையவரைக்குஞ் சரீரத்திற் குட்டநோயினாற்
பீடிக்கப்பட்டு வருந்துதலன்றி வறுமைத்தசையால்
வருந்துதலும் வழுத்தற்பாலதன்று. செல்வர்களி
டத்திற்சென்று ஒன்று யாசித்தாலும் அடித்து
அகலவோட்டுகின்றார்கள். சிலபுண்ணியசீலர்கள்
கொடுக்கக்கருதினுஞ் சிலர்கொடுக்கக் கூடாதெ
ன்று தடுத்து விடுகின்றார்கள். இவ்வாறு அடியே
னுக்குச் சம்பவித்ததற்குக்காரணம் என்னை?

மேலும் சிலர் செல்வமுள்ளவர்களா யிருத்தற்குஞ், சிலர் சரீரத்தில் ரோகாதியில்லா திருத்தற்குஞ், சிலர் இவ்வுலகபோகங்களை இஷ்டப்படி அனுபவித்தற்குஞ், சிலர் இவ்வுலகபோகமானது நிலையல்லாததென்றுந், தேவபோகமே நிலையுள்ளதென்றுங் கருதி அதற்குரிய தவங்களை யியற்றுவதுஞ், சிலர் தேவபோகமு நிலையல்லவென்று வெறுத்து இகத்துக்கும் பரத்துக்கும் ஆதாரபூதமாகிய பரமேஸ்வரனுடைய திருவடியை யடைதலே மேலாகிய செல்வமென்று நினைத்து அதற்குரிய தவங்களை யியற்றுவதும் இப்படி நானாவிதமாக விருப்பதற்குக் காரணம் என்னை? அதன் விபரத்தை அடியேனுக்குத் தேவரீர் திருவுளம் பற்றி யருள்செய்ய வேண்டுமென்ன.

ஆசிரியர்:—இந்தப்பாபிஷ்டனுக்கு இத்தகையாகிய வுணர்வுதோன்றிய தற்குக் காரண மென்னவென்று மௌனமுற்றுத் தெளிந்து முன்சன்மாந்திரத்தில் அபுத்திகாரணமாகப் பசுவை அடித்தவனை விலக்கியதின் புண்ணியமாகுமென்று நிச்சயித்து தனக்குள்தானே ஆனந்த பரவசராய் அந்தக் குடும்பியை நோக்கி அன்புள்ள புத்திரனே! உன்னைப்போன்றவர்கள் உலகத்திலெத்தனையோ கோடி பேர்கள் இருக்கிறார்கள் அவர்களுக்கெல்லாம் உனக்குத்தோன்றிய வுணர்வு தோன்றாததற்குக்காரணமென்னை யென்று உன்னுளாலோசித்துப் பாரென்

றருளிச்செய்ய, சீடன் ஒன்றுந் தோன்றாதவனாய் வருத்தமுற்றுத் தேவரீரே திருவாய் மலர்ந்தருள்க வென்று விண்ணப்பிக்கப், பரமாசிரியர் அதற்கு நேர்ந்து திருவுளம்பற்றிச் சீடன்வினவிய வினாக்களைச் சங்கிரகித்து இதயத்தமைத்துத் தத்தம்வினை யென்றனர்.

சீடன்:—வினையென்பது யாது?

ஆசிரியர்:—வினையென்பது பொதுச்சொல்.

அதாவது, மனவாக்குக்காயங்களாற் செய்யப் படும்நல்வினை தீவினையென்னும் இருவகையினவாய் நற்றொழிலென்றுந், தீத்தொழிலென்றும் பொருள் பட்டுநிற்கும். அவற்றில் மனதாற் செய்யப்படுந் தீத்தொழில்களாவன, பிறர்மனைவியைப்புணர நினைத்தலும், பிறர்பொருளை வஞ்சிக்க நினைத்தலும், பிறர்செல்வத்தைக்கண்டு பொறாமையாக நினைத்தலும், பிறரோடுமுகநட்பாய்ப்பேசி அவர்களைக்கெடுப்பதற்கு என்னவுபாயமென்று சதாநினைத்தலும், பரமேஸ்வரனுடைய காளகண்ட திரிநேத்திர சொரூபத்தைத் தியானியாது சதா ஸ்திரீயின்ரூபம் உள்ளத்திற்றடித்து நினைத்தலும், ஆலயவழிபாடும் அடியார் திருத்தொண்டுமாகிய காரியங்களை நினையாது இதற்குமாறுபாடாகிய காரியங்களை நினைத்தலுமே ஆம்.

இரண்டாவது வாக்கின் தீத்தொழில்களாவன.

வேதாகம நிந்தையும், மாதாபிதாக்கள் நிந்தையும், பாவபுண்ணியமில்லை யென்று வசனித்தலும், பிறர்மனதிற்குத் துன்பம் வரும்படி வசனித்தலும், நாஸ்திகம்பேசி நாத்தழும் பேறலும், மதுபான முதலிய லாகிரிவஸ்துக்கள் சாப்பிடுவதால் பாவமில்லையென்று வசனித்தலும், ஸ்திரீகளை வர்ணித்தலும், பொய்சொல்லுதலும், பெரியோரை நிந்தித்தலுங், களவுசெய்யும்படி யதற்கேற்ற நானாவிதவுளவுகளைச்சொல்லுதலும், ஒருவரிடத்தின் முகநட்பாய்ப்பேசி அவர்போனபின் இகழ்ந்துரைத்தலும், சாஸ்திரங்களை இனிமை யுடையவன்போல் வாசித்துக்கொண்டு அச்சாத்திரங்களிற் சொல்லிய வாக்கியங்களிடத்தில் நம்பிக்கைவையாது பொய்யென்று சொல்லுதலும் இன்னும் இவைபோன்ற வாக்கின்பாவங்கள் அநேகமுள என்றருள.

சீடன்:—அடியேனையாள் வருண்மேனி சாந்திப் படிமீதுவந்தபரனே! காயத்தின் பாவத்தொழில்களையுந் தேவரீர் திருவாய் மலர்ந்தருள வேண்டுமென்ன ?

ஆசிரியர்;—அன்பனே! பிறர்பொருளைக்களவு செய்தலும், பிறஸ்திரீயைக்கூடி அநுபவித்தலும், பிறவுயிரை ஆயுதத்தால் வதைத்தலும், அடித்தலும், களவுபொருள் வாங்கிவிற்றலும், ஆலயவழிபாடுஞ், சிவனடியார்வழிபாடுஞ்செய்யாது இதற்கு மாறுபட்ட காரியங்களிற் பிரவிர்த்தித்தலும் அநிய

இன்னும் அனேகம் உள விரிக்கிற் பெருகுமென்று
சுருக்கி யுரைத்தாம் என்ன ?

சீடன்:—மனம் நடுநடுங்கி இத்தகைமையினவாகிய பாவகிருத்தியங்களை இதுபாவமென் றெண்ணாது சுபாவமென்றெண்ணி இற்றைநாள் வரையு மயங்கிய அடியேற்கு யாதொரு பிரயோசனத்தையுங் கருதாது திருவருள் புரிந்த பெருங்கருணை வடிவே ! இன்னும் இஃதன்றி பாவாதிகளுண்டோ என்ன ?

ஆசிரியர்:—இன்னமும் திரிகரணத்தாலியற்றும் அழுக்கினையுடைய அதிபாதக முதலியவற்றை வற்புறுத்திச் சொன்னாற்றான் பயன்படுமென்று திருக்கருணை யுடையவராய் அன்பனேகேள் பிறவியாகியபெரியகடலில் அமிழ்ந்திவருந்துகின்றவர்களை அக்கடலினின்று கடப்பிப்பவனும், உலகத்தைத் தாங்குகின்றமாயனையும்,யோனிபேதங்களையுமன்றி பிர்திவு முதலிய பஞ்சபூத காரியங்களையும் சிருஷ்டிக்கின்ற நான்முகனையும், முறைவழுவாமல் உண்டாக்குங் காரண சொரூபனும் அவர்களிருவரையு மீண்டுந்தன்னிடத்தி லொடுக்குஞ் சங்காரகர்த்தாவாகிய சிவனை நிந்தனைசெய்து இகழ்ந்த மனத்தினையுடைய அதிபாதகர்கள் நரகத்தில் நெடுங்காலங் கிடப்பார்கள். தனக்கு நிகரில்லாதவனாய் அநாதிமல முத்தனுமான சிவனருளிச்செய்த வேதாகமங்கட்கு ஒப்பாகவும், அதற்கு அதிகமாகவும்,

பிரிந்தோர் நூலைச்சொல்கின்றவர்களும், வேதாகமங்களை நிந்தை சொல்லுகின்றவர்களும் நிந்தையை மனதில் நினைக்கின்றவர்களும், வெம்மையையுடைய எரிவாய் நரகத்தில்வீழ்ந்து உடம்பெலாம் வெந்துலைவாமுருகி துயருற்று யாதனா சரீரத்தினின்று நீங்காதவர்களாய் இந்நரகத்தினின்றும் எக்காலத்திலே கரையேறுவோமென்று வாடிவாடி ஏக்கம் அடைவார்கள். தனக்கு நிகரில்லாத அநாதிமலமுத்தனாகிய சிவனருளிச்செய்த வேதாகமங்களை யாராய்ந்து ஐயந்திரிபு அற உபதேசிக்கும் ஆசிரியனையும் அவமதித்து நிந்தை சொல்லுவார்களானால் அவர்களும் வெம்மையையுடைய எரிவாய் நிரயத்தில் வீழ்ந்து முன்னேகூறிய துயரையும் அடைவார்கள். சிவதிரவியத்தினையும், குருதிரவியத்தினையும் யாவர்க்குமேலாகிய சிவனருளிச்செய்த திருவாக்கியத் திருமுறையையும், விரும்பிக்களவுசெய்தவர்கள் முன்னேசொல்லிய சிவநிந்தகர், வேதநிந்தகர், குருநிந்தகர்களாகிய மூவர்களுக்கும் வருகிற தீவினைப்பயன்களை யுடையவர்களாவார்கள். அஃதன்றியும் எல்லாப்பாவங்களையுஞ் செய்தவர்களுமாவார்கள். இங்ஙனங்கூறிப்போந்த சிவநிந்தகர்கள் முதலாகிய இவர்களெல்லாரும் அதிபாதகரென்று அறிவாயாக. இத்தீமையாகிய பாவங்களுள் அதிகோரபாவமென்று அறியக்கடவை. இதன் கூறிய அதிபாதக பேதத்தையும் மேற்சொல்லுகின்றோம்.

அஃதாவது சிவத்திரவியத்தை அபகரித்தவர்களும், நம்பரமேஸ்வரனையும் அவரது அருச்சனைமுதலியவற்றையும் உள்மகிழ்ந்து ஆனந்திக்காதவர்களும், அப்பூசகரையன்போடு வணங்காதவர்களும், நம்பரமேஸ்வரனெழுந்தருளியிருக்கும் ஆலயங்களில் ஆசார நியமங்களின்றிச் செல்பவர்களும், ஆசிரியரிடத்திலுஞ் சாதுக்கள் சங்கத்திலும் இன்னும் இதுபோன்ற மேன்மை பொருந்திய இடங்களிலும் ஆசார நியமங்களின்றிச் செல்பவர்களும், தம்முடைய அறிவு விளங்கும் வண்ணம் ஒப்பில்லாத சிவவாக்கியமாகிய அறநூல்களை மலர்முதலியவற்றால் பூசைசெய்யாது படிப்பவர்களும், எழுதுபவர்களும், அதைப்பாடஞ்சொல்பவர்களும், மனதினாற் சிந்தனைபண்ணுபவர்களும், சிவஞானநூல்களை நீராடன் முதலிய சரீர சுத்தி செய்யாமற் படிப்பவர்களும், படிப்பிப்பவர்களும், அதனைத் திருமெழுக்கு முதலிய வற்றாற்சுத்திசெய்யாத ஸ்தலத்திலிருந்து சிந்தித்து ஆராய்ச்சி செய்கின்றவர்களும், அங்ஙனம் ஆராய்கின்றவர்களைச்சேர்ந்து தனக்கு ஐயந்திரிபு அறும்படி கருதி உண்மையாகிய சிவாகமப்பொருள்களைக்கேட்பவர்களும், படிப்பவர்களும், பொருண்மேலாசைவைத்து வாஞ்சையினால் சிவாகமத்திருமுறைகளை விற்பவர்களும், பரிசுத்தமில்லாத அசுத்தபூமியிலே அதனை வைப்பவர்களும், ஆன்மாக்கள் பாசத்தாக்குச் சத்துருவான நம்பரமேஸ்வரன் அருளிச்செய்த வே

தாகமங்களைக் கல்லாமல் அந்நியமான பசுநூல்களைக்கற்பவர்களும், சுருதியின் இலட்சணப்படி ஆசிரியரிடத்தில் பாடங்கேட்கும் பரிபக்குவ மாணவர்களை அவமதித்து நிந்தை சொல்பவர்களும், இவைபோன்ற துர்க்கிருத்தியங்கள் செய்பவர்களாகிய அபரசாதுக்க ளனைவர்களுஞ் சிவநிந்தகர்களுக்கு ஒப்பாவார்களென்றுகூறிப், பின்னர் மாணவகனைநோக்கி இங்ஙனம் இதுகாறும் அதிபாதகநாட்டங்களை யுரைத்தனம். இனிமகாபாதகத்தினைச்சொல்லுகின்றேங் கேட்பாயாக, பிராமணனை வதைத்தவனும், மதுபானம்பண்ணின பிராமணனும், பிறருடைய திரவியத்தைக் களவினாலெடுத்துக் கவர்ந்துகொண்டவனும், ஆசிரியன் மனைவியைப் புணர்ந்தவனும், இங்ஙனம் கூறிய நால்வகையோர்களோடுங் கூடித்திரிபவனுமாகிய இவர்களே பஞ்ச மகாபாதகர்களாவார்கள்.

மேற்படி பாவிகள் வருத்தமுறும்படி விரைவிலே நிரையத்தில் வீழ்வார்கள். அதினின்றுங் கரையேறுங்காலமோ சிலவல்ல, நெடுங்காலஞ்செல்லுமென்று பரிந்து மேல் இனிவரும்மகாபாதகநாட்டங்களையும் அறிவாயாக. அஃதாவது ஒருகாரணத்தினால் பொறுத்தற்கரிய கொடுஞ்சொற்களை பிராமணர்கள் முன்னிலையிற் சொல்பவர்களும், பேரறிவுடையோன் யானென்று உயர்வாகத் தன்னைமதிப்பவர்களும், மேலாகிய ஆசிரியரோடு விரோதம்

பண்ணிக்கொள்பவர்களும், தண்ணீருள்ள விடத்
தில் குடிக்கச்செல்லும் பசுக்கத்தைத் தண்ணீர்குடி
யாத வண்ணமறித்து வாதை பண்ணுகின்றவர்க
ளும், தன்னிடத்தில்வந்த யாசகர்களுக்குத் தருகி
றோம் தருகிறோம் என்று சொல்லிப் பின்பு இல்லை
யென்பவர்களும், இவைபோன்ற பாவிகளெல்
லாம் பிரமஹத்தி பண்ணினவர்களுக்கு ஒப்பாவா
ர்கள் என்றுசொல்லி‧ஆசிரியர்தனக்கு அந்நியமில்
லாது அனந்நியமாயிருக்கும்சிவாநந்தவாரியில்மூழ்
கினற்றுன் பாவிகளினிலட்சணஞ் சொல்லியபாத
கம் நிவர்த்தியாகுமென்று நிஷ்டை கூடி மௌன
முற்றிருப்ப, அதுகண்டு சீடனானவன் திகைத்து
இத்தகையாகிய பாவகிருத்தியத்தினின்றும் என்
று ஈடேறுவோமென்ற கவலையுற்று மனதை ஒருவ
ழிப்படுத்தி நின்று சிந்திக்கத்தனக்கோ ருணர்வுண்
டாகி இந்தப்பரமாசிரியனைவிட்டு நீங்காது அவரது
குறிப்பறிந்து பணிவிடைபுரிந்து வழிபட்டு அன்
போடும் ஒழுகுவமானால் அடையக்கூடிய பிரயோ
சனம் யாதோ அதனை அடையலாமென்று எண்ண
முடையவனாய் ஆசிரியர் எப்பொழுது நிஷ்டை
கலைந்து எழுந்தருள்வரென்று எதிர்பார்த்திருந்த
னன். அப்பொழுது அங்ஙனஞ்சற்றுநேரத்திற்குப்
பின்பு சோர்புருடனை ஒருவருமறியாத இடத்திற்
கூடி அந்தச்சிற்றின்பத்தை அநுபவித்து அவனைவி
ட்டுப் பிரிவதற்கு மனமில்லாத ஓர்நாரியைப்போல
தற்பரனை ஓர்தனிமையான மீதான இடத்திற் கூடி.

ப்பேரானந்தப் பேரின்பத்தை யநுபவித்து அவ்வநு பவத்தினின்றும் பிரிவதற்கு மனமில்லாதவராய் ஆசிரியர் நிஷ்டைகலைந்து எழுந்தருளினர். அஃதாவது போராநந்தமாகிய சிவாநந்தத்தினின்று நழுவிய அவசரம் அவ்வியத்தம், அவ்வியத்தத்தில் வியத்தந்தோன்ற, வியத்தத்தில் மகதத்துவந்தோன்ற, மகதத்துவத்தில் ஆங்காரத்துவந்தோன்ற, ஆங்காரத்துவத்தில் குணத்திரையந்தோன்ற அதிலிருந்து தன்சரீர முதலியவைதோன்ற, விழித்தனர். விழித்தாலும்,

க வி.

நின்றநிலையே நிலையாவைத் தானந்த
நிலைதானே நிருவிகற்பநிலையுமாகி
யென்றுமழியாத வின்பவெள்ளந்தேக்கியிருக்க
வெனைத்தொடர்ந்து தொடர்ந்திழுக்குமந்தோ.

என்பதற் கிணங்கவும், இதயத்துள்ளே

யொருக்காலை உணர்ந்தவர்கட் கெக்காலுந்தா
ளொழியாத வின்பவெள்ள முலவாநிற்கும்.

என்னும் நிலையினராய்,

காகமுறவு கலந்துண்ணக்கண்டீர் அகண்டாகாரசிவ [மாய்
போகமெனும் பேரின்பவெள்ளம் பொங்கித்ததும்பிப் பூரண
மாகவுருவாய்க் கிடக்குதையோ வின்புற்றிடநாமினியெடுத்த
தேகம்விழுமுன் புசிப்பதற்குச் சேரவாரும்செகத்தீரே.

பெருங்கருணை யுடையவராய் பாவிருத்திடத்தின் கொடிய

செய்கையையும் அதற்குப் பிரயோசனம் முறை-
யாலன்றி இம்மையிலேயே ஒவ்வொருவரும் நாம்
என்செய்தோம் என்செய்தோம் என்றும், இந்தத்
துன்பம் எனக்கு வரலாமோ வரலாமோ என்றும்
புலம்புவதைப் பார்த்தும் தனக்கு எதிரிலிருக்கி-
ன்ற சீடனுடைய நிலைமையையறிந்து ஒன்றுந்தோ-
ன்றாதவராய் சிவகாருண்ய மூர்த்தியார் தன்மைக்கு-
ஏற்பக்கண்ணீர் ததும்பி இரக்கமுற்றிருந்தனர்.

சீடன்:—கருணாகரனே! என்போன்ற பாவி-
கடான் துக்கப்படவேண்டும் தேவரீர் துக்கப்படும்
காரணம் என்னவென்று அறியேன் அதன்விபரத்-
தை அடியேனுக்குத் திருவுளம்பற்றி யருள்க
என்று பிரார்த்தித்து நிற்க,

ஆசிரியர்:—அன்பனே கேள்! பூர்வத்தில் கமலை-
ன், கமலாட்சன், விட்சுவமாலி யென்னும் திரிபுரா-
திகளாகிய அசுரரால் விஷ்ணுமூர்த்தி, பிரமதே-
வர்முதலான தேவர்களும் மனவலிமை யழிந்து
துன்பத்தை யடைந்து வரிபாந்த புலித்தோலை
ஆடையாகத் தரித்தருளிய பரமசிவனைக் குறித்து
ஆயிரந்தேவ வருஷபரியந்தம் சிவதரிசனம் உண்-
டாதற்குரிமையான பெருமை பொருந்திய தவத்-
தைச் செய்தார்கள். அங்ஙனம் அவர்களெல்லா-
ருந் தவஞ்செய்த காலத்தில் பரமசிவன் கொடியதி-
ரிபுராதிபர் செய்கின்ற வருத்தத்தைக்கண்டு உமை-
யவளோடும் இடபவாகனத்தின்மேல் எழுந்தருளி

வந்து மிக்கபலத்தையுடைய விஷ்ணுமூர்த்தி பிரமதேவர் முதலான சகலதேவர்களையும் பார்க்கும்பொழுது அவர்கள்படுந் துன்பத்திற்குச் சகியாமை காரணமாக மிருதுவாகிய நீர்த்துளிகள் என்போல்வாரெல்லாம் உய்யும்படி பரமசிவனுடைய மூன்றுசண்களி னின்றும் வீழ்ந்ததன்றோ உருத்திராக்கமென்பதாயின் நாம் தொல்லுயிருற்ற துயருக்கிரங்கல் புதுமையன்றே என்ன.

சீடன்:—பரமபிதாவே! தேவரீர் திருவாய்மலர்ந்தருளியபடி அசுரர்களால் தேவர்கள்படுந் துக்கஞ் சகியாமை காரணமாக நமதாண்டவனது திருக்கண்ணிலிருந்து உண்டாகிய கண்ணீரே உருத்திராக்கமென்பதற்குப் பிரமாணமுண்டோவென்ன

ஆசிரியர்:—கீழ்வருவனவே.

## விருத்தாசலப் புராணம்.

திரிபுரரெனும்பெயர் திருந்தசுரராலே
அரியயன்முதற்சுர ரழிந்துதுயரெய்தி
வரிபுழுவை யுரிபுனையும் வானவனைநோக்கி
அரியதவ மாவருட மாயிரமுறைந்தார்.

வன்றிரிபுராதிபர்செய் வாதைதனைநோக்கி
அன்றுவிடைமேலரனு மம்பிகையும்வந்து
வன்றிறன் முராரியயன் வானவரைநோக்க
மென்றுளிகண் முக்கணினும் வீழ்ந்தவெமர்வாழ.

உருத்திரன் விழித்துளிக ளேயுருத்திராக்கம்
திருத்திரவிசந்திரன் றிருந்துகனற்கண்ணின்
அருத்தின்மிகு பேதமிரண்டாறு பதினாறு
பொருத்தொருபான்மேனிசெம்மைபோன் றவழுங்காரே

சீடன்:—சுவாமி! சகித்தற்கரிய கொடியபாதகங்களைச்செய்து இம்மையிலேயே துயரமனுபவித்து அவைகளினின்றும் நீங்கினவர்களுண்டோ வென்ன?

ஆசிரியர்:—அன்பனே! யாம்சொல்லும் வாக்கியம் பத்தர்க்குத் தித்திக்கும், பாவிக்கறக்கசக்கும் அஃதெங்ஙன்போல வென்னில் இரண்டுகளங்கமற்ற கண்ணாடிகளும் சம்பந்தமாயின் ஒன்றுபடும். வேறுபட்ட ஆடியாயின் மாறுபடும். அதுபோல வேதாகம வாக்கியங்களை உணர்த்து மாசிரியனும், அவைகளை யன்போடு கேட்கு மாணவகனும் அருள்வசமாயின் ஆனந்தப் பிரயோசனமாம். அன்றாயின் அப்பிரயோசனமாம். மேலுங் கொடிய நரகப்பிராப்தியுமாம். ஆகையால் நீ யுன்மனதை விடயங்களிற் செல்ல விடாது ஸ்ரீ ஸ்தூல பஞ்சாயதனத்தியானபரனாயிருந்து கேட்பாயாக வென்ன?

சீடன்:—பயந்து நடுநடுங்கி பரமாசிரியரை அஷ்டாங்கபஞ்சாங்க விதிப்படி நமஸ்கரித்து ஒன்றுபடு சிந்தையனாய் அமிர்தத்திருவாக்கை எதிர்பார்த்திருந்தனன். அந்தச்சமையத்து இந்நேரத்தில்

விதைவிதைத்தாற்றான் முளைத்துப் பயிராகுமென்றறிந்தவுடனே அருளிச்செய்வாராயினார். அஃதாவது ஸ்தூல பஞ்சாட்சரத்தைத் தியானித்து அதன்புண்ணிய விசேடத்தால் தனக்குண்டாகிய உரோகாதி நிவர்த்தியாய்ப் பிறவிப்பிணியைக் கடத்தற்குமேல் நடத்தும் சாதனாதிகளை யபேட்சிக்கும்ஆரம்பமுடைய மாணவகனே! பூர்வத்தில் திருமாலைநோக்கி நம்பரமேஸ்வரன் திருவாய் மலர்ந்தருளிய சசிவன்னனது சிறப்புப்பொருந்திய சரித்திரத்தைக் கேட்பாயாக, அழகுமிகுந்த பாவவெச்சனென்று சொல்லாநின்ற ஒருபிராமணனுடைய குமாரனுஞ் சசிவன்னனென்னுந் திருப்பெயருமுடைய ஒருவன் உலகத்திற்கொடிதான சகலபாவங்களையே தனக்கு ஓர் உருவமாகவும் அடியார்களையும், யாவருந்துதிக்கப்பட்ட வேதத்தையுந், திருநீற்றையும் உண்மையாகிய அறத்தையும் நிந்தைசொல்லுவதே அவனுக்குங் கல்வியாகவுந், தினந்தோறுங் களவுசெய்வதே அவனுக்கு நியமமாகவும், அடுத்தவர்களை வஞ்சித்துக்கெடுப்பதே அவனுக்குக் குலாசாரமாகவும், ஸ்திரீகளையுஞ் சுற்றத்தாரையும் வாலிபரையுங் கருப்பத்தையும் பசுக்களையும், பிராமணர்களையும் கொல்லுகின்ற விரதமே அவனுக்கு விரதமாகவும், நல்லநீதியையுடையவர்களின் வீட்டில் நெருப்புவைத்தும் அவர்களுக்கு விஷமருந்துகளையூட்டியுஞ், சொக்குப்பொடிகளைத் தூவியும் அவர்களிடத்துள்ள பொருள்களைப்பறித்

துக்கொள்வதே அவனுக்குத்தேள்வியாகவும், பொய்யாகக் கடன்பத்திரமெழுதி ஒருவனுடைய எவனாவனைப் போற்போய்க் கடன்கேட்டு வஞ்சனை செய்து அவன்மேற் புறங்கூறியுங் கோள்சொல்லியும் பழயசிநேகிதனைப் போற்போய் விருந்துபுசித்து அவர்கள்வீட்டில் களவுசெய்து பின்பு சத்துருவைப் போலப்பேசியும், மிகரற்ற பழிப்புச்செயல்களில் நீங்காதவனாய்ப் பொய்யைநிறைத்து எழுதிய சீட்டைக்காண்பித்துப் பூமிகளையும் பொருள்களையும் அபகரித்துக்கொண்டும், பிராமணசந்நியாசிவேடங்கொண்டு வழிக்கரையிலிருந்து வழியே வருகின்றவர்களை வருத்தஞ்செய்து அவர்களிடத்துள்ள பொருள்களைப்பறித்துக்கொண்டும், பலேச்சியை மனையாளாக்கிக்கொண்டு பாதகர்களோடு சிநேகிதஞ்செய்தும், மாமிசமும், அபினும், கள்ளும், ஈயனும், உணவாகப் புசித்துக்கொண்டும் இருந்தான். இவ்வாறிருந்த விப்பாதகனது குலத்திலுள்ளவர்களில் தேவர்களாய்ச் சுவர்க்கத்திற்குப் போனவர்களெல்லாரும் கொடுமையாகிய நரகத்தில் விழுந்தார்கள். இச்சசிவன்னன் தான்செய்த பாவங்களை வலிதாகிய முயலகவியாதியும் பசாசமும் மற்றுநல்லவியாதிகளுமாயிச் சூழ்ந்து வருந்த. மூர்ச்சித்து வருப் கிடந்துவருந்தினன். நரகமும் இவன் கட்டிடத்தில் வருவானை இவனைச் சமைத்து எப்படி நாம் சகிப்பதென்று நடுங்கத்தொடங்கிற்றென்றால் நாம்

இவனது அளவில்லாத கொடிய பாதகங்களைச் சொல்லற்பாலதோ வென்றருள.

சீடன்:—இதற்குப்பிரமாணமுளவோ ?

ஆசிரியர்:—கீழ்வருவனவே.

—○○※○○—

## விருத்தாசலப்புராணம்.

காரணர்தம்மைநோக்கி நம்பர்தாமருளிச்செய்வார்
சீரணிதலத்திலுளோர்கள் சேவையின்பெருமைகேளா
யோரணிபாவவெச்ச னென்றொருமறையோன்மைந்தன்
றாரணிதன்னிற்பாவி சசிவன்னனென்பான்மன்றே. 1

பத்தரையுன்னையெம்மைப் பரவுவேதத்தைநீற்றை
மெய்த்தருமத்தைநிந்தை விளம்புவன்றன்கல்வி
நித்தமுங்களவுசெய்து னியமமாயடுத்தார்தம்மை
குத்திரஞ்செய்தருளே குலாசாரமாவதுமா. 2

மாதரைக்கிளைஞர்தம்மை வாலரைக்கருவைக்கோவை
வேதியர்தம்மைக்கொல்லும் விரதமேவிரதநல்ல
நீதிகளுடையோர்வீட்டி னெருப்பிட்டும்விடங்களிட்டும்
பாதகப்பொடிகவிப் பறிப்பதேயவன்றன்கேள்வி. 3

பத்திரமெழுதியேவற் பணியினர்போலச்சென்று
குத்திரஞ்செய்துகோளுங் குறளையுமுரைத்துமுன்னை
மித்திரர்போலச்சென்று விருந்துண்டுகளவுகொண்டு
சத்துருவாகப்பேசித் தனிப்பழிதீராநின்றான். 4

நிறைத்தபொய்யோலைகாட்டி நிலங்களுந்தனமுங்கொண்டு
மறைத்தவேடங்கொண்டு வழிக்கரைவருத்தியிட்டும்
பறைச்சியையமோலியாக்கிப் பாதகரிணக்கஞ்செய்தும்
இறைச்சியும்அபினுங்கள்ளும் ஈயவு மருந்தாகின்முன். 5

சுரர்களாயிவன் றன்வர்க்கஞ் சுவர்க்கத்தையடைந்தோரெல்
தரமிலாநரகில்வீழ்ந்தார் சசிவன்னன்செய்தபாவ [லாம்
முரண்முயலகனும் பேயுந் நோயுமாய்மொய்க்கவீழ்ந்தான்
நரகமும்வருவனென்று நடுக்கிடத்தொடங்கிற்றம்மா. 6

## சசிவன்னபோதம்.

எமம்புகுவாருளபாதகரா
மியாவர்க்குளுமிக்கவனுகுமிவன்
நாமம்புகல்வார்குலமுமெரிவாய்
நரகம்புகுமாறுடைத்தனனே. 1

மலமேவியதீவினையின் வலியான்
மகிழும்பர்பதத்திலிருந்தவிவன்
குலமேவியதென்புலவாணர்களுங்
கொடிதாகியநரகங்குடியேறினரே. 2

மிகமேவியபுண்ணியபாவமெனும்
வினையின்பயன்மேலொருகாலமுறு
இகமேவருமென்பதறுவானோ
வெல்லாமிவனைச்செறவெய்தினவே. 3

சீடன்:—சுவாமி இதுகாறும் கூறியவிர்த்தாந் தங்களைத்தாம் அறிந்தனன். இன்றும் இவன் இத்துன்பத்தினின்று நீங்கியுய்ந்ததையும் திருவாய் மலர்ந்தருள்க.

ஆசிரியர்:—கேளாய்மாணவகனே! இவ்வாறு அநியாயங்களால் சசிவன்னன் ரோகாதிகளாற் பீடிக்கப்பட்டு படுகின்றதுன்பத்தை அவன்பிதாவாகிய பாவவெச்சன்கண்டு மனஞ்சகிக்காதவனாகிப் புத்திரன்பேரில்வைத்த வாஞ்சையினால் இவனுக்கு இத்துக்கம் எவ்விடத்தில் எக்காலத்தில் எவ்விதத்தில் யாவரால் நிவர்த்தியாமோ வென்று இவனைக்கொண்டு எங்கணுஞ் சுற்றித்திரிந்தனன். இவ்வாறு இப்பாவவெச்சன் வனாந்திரமுதலிய விடங்களிற் சுற்றித்திரிகையிற் சென்மாந்திரத்திற்செய்த கிஞ்சிற்று சிவபுண்ணியப்பேற்றால் தேவபத்தரென்னும் ஒருபெரியவரைத் தரிசிக்கப்பெற்று அடியற்றமரம்போல பூமியில் விழுந்து எழுந்து துதித்து நின்று குரூரமான தனது புத்திரன்செய்த சகலதீவினைகளையும் நன்றாகத்தெரியும்படி விண்ணப்பித்து நின்றனன். அதுகேட்டு அன்பும் அருளும் உடைய அந்தத்தேவபத்தரும் கிருபைகூர்ந்து அநுக்கிரகஞ்செய்கின்றார்.

வருத்தங்கொண்ட பாவவெச்சனென்னும் பிராமணனே! நீகேட்பாயாக, இக்கொடியநோய்க்கு ஒளடதம் மஹாதவ சிரேஷ்டர்களாகிய மஹான்களது தரிசனமேயன்றிவேறன்று என்றுகூறி முடிவில்லாத வின்பத்தைத்தரும் சுத்தீச்சுரமென்னும் பரிசுத்தம்பொருந்திய திவ்வியஸ்தலத்தி லெழுந்தருளியிராநின்ற மாகந்திபராயணரென்னும் பெரி

நீராணிவித்து இரண்டுதிருவடிகளையுஞ் சிரசின்மேற் சூட்டி ஆசிரியர் பிரமோபதேசஞ் செய்தருள சசிவன்னன் திவ்வியஞானனுக்கிரகம் பெற்றதோடும் விடாமல் சமாதிகூடி நித்தியானந்தமாயுள்ள மோட்சவின்பத்தை யடைந்தவன். முன்பு இவன்செய்த பாவங்களால் நரகத்தையடைந்துள்ள பிதிர்க்களும் பிதாவாகிய பாவவெச்சனும் பெரிதாகிய சிவலோகத்தைச்சேர்ந்தார்கள். இவ்வாறு பெறுதற்கரிய பேற்றினைச் சசிவன்ன னடைந்தானென்று அருள்செய்து இச்சசிவன்னனைப்போல வுலகத்திலெத்தனையோ கோடிபேர்கள் பாவாதிகளைச்செய்தும் இம்மையிலேயே சகித்தற்கரிய கொடியதுன்பங்களை யநுபவித்து மிருப்பார்கள். இவர்களெல்லாம் சென்மாந்தரங்களில் கிஞ்சிற்று சிவபுண்ணியம் செய்யாமையாலன்றோ மறுமையினுங் கொடிய நரகப்பிராப்தி யடைந்தனர்கள். இச்சசிவன்னனுக்குச் சென்மாந்திரங்களில் கிஞ்சிற்று சிவபுண்ணிய மிருந்தமையாலன்றோ இம்மையிலேயே பெறுதற்கரிய மோட்சவின்பத்தை யடைந்தானென்றனுக்கிரகித்து அச்சிவபுண்ணியத்தின் மகிமையை நோக்கி அளவுகடந்த சந்தோஷ சித்தராய் அருணோக்குற்றிருந்தனர்.

சீடன்:—சுவாமி! சசிவன்னனுக்கு சென்மாந்திரங்களில் கிஞ்சிற்று சிவபுண்ணிய மிருந்தமையால் இம்மையில் பெறுதற்கரிய சிவசாயுச்சியத்

த்தை அடைந்தானென்று அருள்செய்திருக்கிறதே அச்சிவபுண்ணியமாவது யாது. அதனை தேவரீர் திருவுளம்பற்றி யருள்கவென்றிரந்தனன்.

ஆசிரியர்:—அன்பனே! சிவஞான செல்வத்தைப்பெற்ற மகத்தாகிய மஹான்களுக்கு அன்போடு தானஞ்செய்து அளித்தபொருள் சிறிதே யாயினும் நிலமலைபோற்றிகழ்ந்து அப்புண்ணியம் பரிபாகப்பட்டு சரியைகிரியையோகம் ஏனோர்க்குப்போல் காலநீட்டிப்புச்செல்லாது விரைவிற்செய்து முடித்து இருவினையொப்புண்டாய் ஞானத்துக்குப்பக்குவராகச்செய்து மோட்சத்தினையடைவிக்கும்.

இதற்குப்பிரமாணம் சிவஞானசித்தியார்.

சிவஞானச் செயலுடையோர் கையிற்றானந்
திலமளவே செய்திடினு நிலமலைபோற்றிகழ்ந்து
பவமாயக்கடலிலழுந் தாதவகையெடுத்துப்
பரபோகந் துய்ப்பித்துப் பாசத்தையறுத்துத்
தவமாரும் பிறப்பொன்றிற் சாரப்பண்ணிச்
சரியைகிரியாயோகந் தன்னிலுஞ்சாராமே
நவமாகுந் தத்துவஞா னத்தைநல்கி
நாதனடிக்கமலங்க ளணுகுவிக்குந்தானே.

சீடன்:—முன் சென்மாந்திரங்களில் ஒருவன் பெரியோர்களுக்கு அன்போடு தானதருமங்கள் செய்திருந்தால் இச்சென்மத்தில் புண்ணிய சிரேஷ்டனாகவல்லோ செனிக்கவேண்டும். அப்படி

யல்லாது பாபிஷ்டனாக செனிக்குங் காரணமென்னை ? அதன்விபரத்தை அடியேனுக்கு விளங்கவருள்செய்யவேண்டுமென்ன ?

ஆசிரியர்:—அன்பனே ! இங்ஙனம் சஞ்சித்த சங்கை யறியாதேகூறினாய் எனெனில், முன்சென்மாந்திரங்களில் செய்தகன்மங்கள் அளவிறந்தனவாயிருத்தலால் அக்கன்மங்கள் எந்தெந்தக்காலங்களில் பரிபாகப்படவேண்டுமோ அந்தந்தக்காலங்களில் தானே பரிபாகப்படும். இச்சசிவன்னனுக்கும் முன்பாவகன்மங்கள் பரிபாகப்பட்டு அதற்குரிய பாவகன்மங்களைச் செய்வித்தும், அதற்குரிய பிரயோசனம் இம்மையிலேயே சகித்தற்குரிய துன்பங்களை அடைவித்தும், யாதோ ஒன்றிற்று சிவபுண்ணியம் பரிபாகப்பட்டு அடைதற்குரிய பேற்றையும் அடைவித்தன. இதில் உன்னவுனக்குச்சந்தேகம இதற்குத் திருஷ்டாந்தம் இயாதோவெனில் வேளாண்மை செய்வோன் ஒருவன் நாநாவிதமான வித்துக்களை விதைக்கின்றனன் அவ்வித்துக்களானது எந்தெந்தக்காலத்தில் முளைத்து பரிபாகிப் பலன்கொடுக்குமோ அந்தந்தக் காலங்களில் தானே கொடுக்கும் இதுபோலா மென்றறியக்கடவையென்று சொல்லியருள.

கலி.

ஐயனேயெனதுனோயின்றனந்தசென்மங்களாண்ட
மெய்யனேயுபதேசிக்க வெளிவந்தகுருவேபோற்றி
நின்போன்ற மாதவர்களெல்லாம்,

முகமெலாங்கண்ணீர் முத்தரும்பிடச்செங்கை முகிழ்ப்ப
அகமெலாங்குழைந் தானந்தமாகநல் லறிஞர்
இகமெலாந்தவ மிழைக்கின்றார்.

யான்பாவி கொடியகுட்டநோயால் சகித்தற்கரிய துன்பத்தை யனுபவித்துக்கொண்டு தேவரீர் சந்நிதானத்தில் இருப்பது அழகோ? முன்னர் இந்த கொடூரமான ரோகம்நிவர்த்தியாகும்படி கிருபாகடாக்ஷம் செய்தருள வேண்டுமென்று சீடன் இரங்க.

ஆசிரியர்:—தனக்குத் தோன்றாத்துணையாகிய பரமேஸ்வரனை தியானித்து பரிபூரண நோக்கராய் மாணவனது சகலரோகங்களும் நீங்கும்படி கிருபாகடாக்ஷம்செய்து திருவருள் மயமாயினர். அங்ஙனம் சீடன் சூரியனைக்கண்டபனிபோலவும், ரோகாதிகள்நீங்கி ஞானசூரியன் உதையமான இடத்து அஞ்ஞானயிருள் நாசமானாற்போலவும், பாவாதிகள்நீங்கி குருடர்க்குக்கண்ணும் முடவர்க்குக்காலும் உண்டானாற்போலவும், தெளிவுஞானநடையும் உண்டாகி நம்மணிவாசகபெருமானுக்கு திருப்பெருந்துறையில் நம்பரமேஸ்வரனுகிய ஆசிரியனை குருந்தமரத்தடியில் கண்டபோது தமது உள்ளத்திலிளைந்த ஒப்புவமையில்லா பேர் உவகைபோல பேரானந்தக் கடலில்மூழ்கி ஆசிரியரது திருவடியில் பன்முறை விழுந்து எழுந்து நின்று எமது அன்பாகின்ற குருநாதனே! தேவரீர் இவ்வாறு திரு

வருள்செய்த இப்பெருதவிக்கு சிறியேன் செய்யும் கைமாறு ஒன்று அறியேன் என்று இரங்கும் மாணவகனைநோக்கி பரமகுருநாதன் அன்பனே! ஸ்ரீசூக்ஷ்மபஞ்சாட்சரத்தை இடைவிடாது தியானித்துக் கொண்டு மஹான்களாகிய சிவஞானிகளது பரிகலப்பிரசாதத்தை பிறவிப்பிணிக்கு மருந்து யிதுவாமென்று உள்க்கொண்டு அவர்களது வழிப்பாட்டில் சதாநிற்பதுவே நீசெய்யும் கைமாறும் என்றருள்செய்தனர்.

சீடன்:—அதிசயித்து ஆனந்தபரவசனாய்த்தமது அன்பார்ந்த பரமபிதாவைநோக்கி அந்தமஹான்களாகிய சிவஞானிகளது மான்மியப்பெருமையையும், அவர்களது பரிகலப்பிரசாதத்தின் மகிமையின் அருமையையும் திருவுளம்பற்றியருள்கவென்று பிரார்த்தித்து நிற்க.

ஆசிரியர்:—எனதன்புள்ள மாணவகனே சொல்லுவோங்கேட்பாயாக, பண்டொருகாலத்துள்ள எல்லாம்வல்ல அல்லமதேவர் தன்னைத் தன்வீட்டிற்கு அழைத்துச்செல்லும் வசவண்ணனோடு அனந்தபேதமாயுள்ள பற்பல வஸ்த்துகளையும் களன்று உண்மையாகிய பரமசிவத்தை பிரண்டறக்கலக்க அடைவோரது செயலைப்போல தவம்புரிதற்கியற்றிய பலவறைகளையுந் தனித்தனிக்கண்டு கடந்துசென்று சாதருண்டமென்னு மிடத்தைச்சார்ந்து உயர்வாகிய வந்தப்பிரசாத குண்டத்தினது

கரையில் மயக்கமேற்கொண்ட பித்தரைப்போல
மருளசங்கரனென்போன் சஞ்சரித்தலைப்பார்த்து
அவனது யோகநிலையையுணர, அம்மருளசங்கரமு
னிவன் தன்னைக்கண்ட வல்லமதேவரைக்கண்டு
அளவுகடந்த சந்தோஷசித்தனாய் விரைந்தோடி
அவரது அழகியபாதங்களில் விழுந்து நமஸ்கரிக்க
உடனே அல்லமதேவர் தமதுகையினாலெடுத்து
மெய்யோடணைத்து தனக்குள்ளெழுந்த வானந்த
த்தோடு உண்மையை யனுக்கிரகித்து அவரோடு
கூடியிருக்க சித்தராமன் அனுக்கிரகித்த நிலையைப்
பார்த்து அந்தமருளசங்கரனது குணங்களைக்கண்டு
அதிசயித்து இதனைச் சொல்லத்தொடங்கினேன்.
குண்டத்திற்பொருந்திய பிரசாதத்தைக்கொள்ளை
கொள்ளையாக வேற்றுக்கொண்டு உண்டொழுகின்ற
மருளசங்கரமுனிவரது உண்மைநிலையை தண்டநா
யகன்முதலிய வடியார்கள் யாவருந் தெரிந்திலரா
னால் இனிக்காணவல்லவர் யாவருளர் ஒருவருமிலர்
அஃதென்னேவெனில் சரியையுங் கிரியையும் பிரா
ணபந்தனஞ்செய்யும் யோகமுமாகிய விவற்றைச்
செய்பவர்களை அங்ஙனமியற்றுஞ் செய்கையாலறி
யக்கூடும் உன்மத்தர்போல வாழினுஞ் சகசசமாதி
யினின்று பிறிதோர் செய்கையுமின்றி வாழப்பட்ட
நல்லசிவஞானியை அறியக்கூடுமோ என்று சொ
ல்லிநின்ற சித்தராமனைநோக்கி அல்லமதேவர் இந்த
மருளசங்கரமுனியினது உண்மை நிலையைக்கண்ட
னையாவென்ன? இராமன் அஞ்சலியத்தனாய் இங்

வனமாகச் சிறந்துநின்ற விவன் பித்தரைப்போல விருக்கும் விதமென்ன இதனைத் தெரிவிக்கவேண்டு மென்றிரங்க அங்ஙனம் அல்லமதேவர் பிரபுலிங்க லீலை மருள சங்கரகதியில் சொல்லியருளியதை யான் உன்றனக்கு சொல்வோம் கேட்பாயாக.

தொழிலான்முயன் றுநுகர்வமெனிற் றுயவொன்றுயிர்க்கு விளையுமென, வொழியாமலசரமூர்த்தி யுண்டபிச்சினுகர்வமெனிற், பழியாதுமிலையகன்றுபோம் பவமுமென்னப் பிரசாதக், குழியாரனதனை யகலாமற் கொண்டிங்கிருந்தான் குணமிக்கான்.

பந்தமகன்றசிவபத்தர் பாதம்விளக்கும் புனற்குழியில்
வந்துபிறந்துமூழ்கியதில் வைகும்புழுவின் பெரும்பேறு
முந்துகங்கைமுதலவா முற்றும்படிந்து தீவினைகள்
சிந்துமந்தணுளருமே சேராரென்று மறைசாற்றும்.

தாய்க்குமழுவின் மகவிர்க்குத் தந்தைதனக்குப்பசுவிற்குச்
சேய்க்குமறையோர்தமக்கிடர்செய் தீர்வில்கொடியபாதகமு
போக்குமிமைப்பிற் கரணத்தைப் புனிதமாக்கிச்சிவமாக [மு
ஆக்குமரன்றன்பிரசாத மாயினதற்கு நிகருண்டோ

பசிக்குமருந்துமாய்வீடு பயக்கும்வன்மை சேர்ந்துபவம்
நசிக்குமரன்றன் பிரசாத நூதியர்தானுணார்ந்திங்கு
வசிக்குந்தகைமை சங்கரற்கே வருமதன்றிப்பசிக்குணவு [ன்
புசிக்குமனிதர்தமக்கென்றும் பொருந்ாதென்றுமென்பிரா

என்றும் (திருமந்திரம்) வித்தகமாகிய வேடத்தாருண்ட வூண், அத்தன் அயன் மால் அருந்திய வண்ணமாம், சித்தந்தெளிந்தவர் சேடம்பருகிடின், முத்தியாமென்றநம் மூலன்மொழிந்ததே. என்று

அநுக்கிரகித்துமௌனமுற்றிருந்தனர். அதுகண்ட சீடன் ஆசிரியரநுக்கிரகித்த திருவாக்கை சிரமேற்கொண்டு சகித்தற்கரிய தரித்திரமுடையவனுக்கு இராசபோகங்கிடைத்து அநுபவித்தாற்போலஇவனுமுபதேசப் பொருளைப்பெற்று தியானபரனாய் மஹான்களது பரிகலப் பிரசாதத்தைக்குறித்து அவர்கள் வசிக்குமிடங்கள்தோறுஞ் சுற்றித்திரிந்து அப்பிரசாதத்தினை யேற்றுண்டு பின்னுஞ் சுவாமிகளிடத்துவந்து ஆங்குள்ள பணிவிடைகளைச்செய்து அவர்களது பரிகலப்பிரசாதத்தையுமுட்கொண்டு இப்பெரும்பேறு பெற்றேமே என்று தனக்குள்தானே ஆனந்தபரவசனாய் மகிழ்வுற்று சுவாமி அதிபாதகமுதலிய இம்மையில்செய்தவர்கள் மறுமையில் அடையுங்கதியென்ன? அதன் விபரத்தை விளங்க அருள்செய்யும்படி விரும்புகிறேன் என்றிரங்க.

ஆசிரியர்:—அன்பனேகேள்! அப்பாவிகளெல்லாம் பூதனுசரீரம்போனவுடன் புரியட்டசரீரந்தானே யாதனாசரீரம்பெற்று, அதிபாதகத்தைச்செய்தவரும், அதிபாதக துல்லியத்தைச்செய்தவரும், இருபத்தெட்டுக்கோடி நரகத்தைப் பொருந்திப் பிரமப்பிரளய காலமாகிய ஆயிரஞ் சதுர்யுகவளவும் அதனைவிட்டு நீங்காதழுந்துவார்கள். பஞ்சமகாபாதகத்தைச் செய்தவர்கள், இருபத்தெட்டுக்கோடி நரகத்தில் சந்திராதித்தருள்ளவரையிலும்

கிடந்து அழுந்துவார்கள். பாதகத்தைச்செய்தவர்கள், பதினாறுகோடி நரகத்தில் பிரமனது நித்தியப்பிரளயத்தில் பாதியாகிய ஐந்நூறு சதுர்யுகம் அளவுங்கிடந்து அழுந்துவார்கள். மற்றைப்பாதகர்க்கு மேற்சொல்லுவாம். உபபாதகத்தைச் செய்தவர்கள் ஏழுகோடி நரகத்தில் இருநூற்றைம்பது சதுர்யுகம் அளவுங்கிடந்து அழுந்துவார்கள். அதற்கு அந்நிதானபாவத்தைச் செய்தவர்கள் மூன்றரைக்கோடி நரகத்தில் நூற்றிருபத்தைந்து சதுர்யுகமளவுங்கிடந்து அழுந்துவார்கள். இவ்வாறு விதித்தகாலங்களளவும் அதிபாதக முதலிய பாவத்தைச்செய்தவர்கள் நரகத்திற்கிடந்து துக்கங்களை அனுபவித்துத்தொலைக்கும் பொழுது அவர்களைத் தொடர்ந்து நின்ற கொடிதாகிய பாவமெல்லாம்விட்டு நீங்கிப் பாவிகளாயினோர் இவ்வாறு நரகபேதங்களை யனுபவித்து அக்காலந்தொலைந்தவாறே நரகசேடம் அனுபவிக்கும்படி மீளவும் பூமியில்வந்து பிறப்பார்கள். இவ்வாறு பூமியில் வந்த பாவிகள் தாந்தாஞ்செய்த கர்மத்துக்கீடாக முதலில் தாபரயோனி பேதங்களெல்லா வற்றையுமெடுத்தும், ஆங்குள்ள துக்கங்களெல்லாமனுபவித்தும் பின்பு தாபரயோனியைவிட்டு புழுவாய்ப்பிறந்து ஆங்குள்ள துக்கங்களை யனுபவித்தும், இவ்வாறு புழுவாயெடுத்ததேகத்தைவிட்டு அதற்குமேலாகிய பறவையுருவெடுத்து அதனாலுண்டாகிய துக்கங்களெல்லாமனுபவித்தும், தொலைத்தும், தொலைந்தவா

றே பின்னர் மிருகாதிகளாய்ப் பிறந்தாண்டுள்ள துக்கங்களை யனுபவித்தும், இன்னுமிருகசாதிகளாயெடுத்த்தேகத்தைவிட்டுப் பசுச்சாதி வடிவெடுத்தாண்டுள்ள துக்கங்களெல்லாம் அனுபவித்தும், இவ்வாறு துயரங்கள் பலவற்றையு மனுபவித்துத் தொலைந்தவாறே, பசுச்சாதியாயெடுத்த தேகத்தைவிட்டு இவ்வாறே தாபரமுதலிய யோனிபேதங்களை யெடுத்து அந்தந்தச்சனனங்களிலுண்டாகிய துக்கங்களெல்லாவற்றையு மனுபவித்துப்பின்பு பாவசேடமைந்த தீவினையினின்றும், விடுபட்டுமுன்னுட்பரிபாகப்பட்ட நல்வினைப்பகுதிவந்துபொருந்த அந்த நல்வினையின் பெலத்தினால் மானிடராகப் பிறப்பார்கள். பிறந்தாலும் முன்சென்மாந்திரவாசனைப்படியே பாவாதிகளையே சாதனமாகச்செய்து வருவார்கள். பெறுதற்கரிதாகிய மானிடச்சரீரத்தைப் பெற்றும் இதனால் அடையும் பிரயோசனமாகிய மோக்ஷ இன்பத்தை யடைதற்குரிய சாதனாதிகளை அபேக்ஷியாது சமுசாரபந்தத்தையே அபேட்சித்திருக்கும் அறியாமைதான் என்னைகொலோ என்னை?

சீடன்:—ஐயனே! இதுவரையும் பாவியரானோர் நரகங்களையும் அதன்சேடங்களையும் அனுபவித்துமீண்டு மானிடராய்வந்த முறைமையினை தேவரீர் அருளிச்செய்ய அறிந்தனன் இதற்குச் சுருதிப் பிரமாணமுண்டோ என்ன?

ஆசிரியர்:—சிவதருமோத்ரம் சுவர்க்கநரகவியலில்.

உற்றிடுவரெழுநான்கு கோடியினுமொருவாதே
பறறியதிபாதகத்தைப் பரித்தார்கள்பாரினையு
மற்றையவிண்டலத்தினையும் வாரிகொளுநாள்வரையு
முற்றுமதிபாதகத்துக் கிணையதனைமுடித்தாரும்.

இரவிமதியுள்ளளவு மெவற்றழுங்கியிடுவார்கள்
பிரமவதைமுதலாய பிழைபுரிந்தபேதையர்கள்
விரவிடுவர்பாதகத்தை விளைந்தார்கள்பதினன்குட்
பிரமனொருபகற்பாதி மற்றையர்க்குமபேசிடுவோம்.

பாதமுறப்பகலதனிற் பதினன்கிற்பாதிதனில்
வாதையுறுவார்களுப பாதகத்தைமருவினர்கள்
பாதத்திற்பாதியுற மூன்றறையிற்பாவியர்கள்
கேதமறும்பொழுதவல வினையனைத்துங்கெட்டிடுமே.

வே று.

பாவபேதம் பயிற்றியபாவிக
ளேவமாய் நரகிடரெய்தியுந்
தீவினைப்பல சேடமுஞ்சேரவே
சேர்வாமுன்பயின் மண்மிசைத்திண்ணமே.

அடைவர்தாபர பேதமனைத்தையும்
படர்வாங்குள துன்பபலத்தினும்
விடுவர்தாபர யோனியைவிட்டபின்
முடுவர்கீட வுருவுந்துரிசரே.

கிட்டியேநின்ற கீடவுருவமும்
விட்டுமற்றை விகங்கவுருவினைத்
தொட்டுநின்ற துயர்பலதுய்த்தபி
னெட்டுவார்விலங் கின்னுருபாவையும்.

விட்டுநின்ற விலங்கினுருவினைத்
தொட்டுளோர்பசு வின்னுருத்துன்பமும்
பட்டுளோர்துய ரம்பலபட்டபின்
விட்டுளோர்பெற்ற மாகியமேனியும்.

இனையமேனி விதம்பலவெய்தியே
துனியனைத்தையுந் துய்த்துத்தீரிசூறு
வினையினீங்கிமுன் னல்வினைமேவவே
மனிதராகிப் பிறப்பர்கள்வாய்ப்பினுல்.

என்று அருள்செய்து பாவிகளானோர் மறுமையில் கொடியநரகப் பிராப்தியடைந்தும், பின் நரகசேடத்தை யனுபவித்தும், பின்ரோகாதி தாரித்திரமுதலியன அடைந்தமானிடராய்ச் செனித்தும், இத்யாதி துன்பங்களெல்லாம் அடைந்தும், நல்விவேகம் வாராது முன்சென்மாந்திர வாசனையின்படியே மேலும் பாவாதிகளையேசெய்ய மனம் இயைந்து நிற்பதை நோக்கி இரக்கமுற்றிருக்க,

சீடன்:—எல்லாம் வல்ல இறைவனே! தேவரீர் திருவாய்மலர்ந்த அதிபாதகமுதலியசெய்த பாவிகளானோர் நரகபேதங்களை வெகுகாலமனுபவித்துப் பின்நரகசேடத்தை யனுபவித்தற்பொருட்டு இவ்வுலகத்தின்கண் தாபரமுதல் பசுவீறாகவுள்ள செனனங்களையெடுத்து ஆங்குள்ள துககங்களை யனுபவித்துப் பின்ரோகாதி தாரித்திரதிசையுள்ளமானிடர்களாய் ஈசன் ஆக்ஞையால் தோன்றுவார்களென்றும், அப்படித்தோன்றினும் பின்

னும் முன்சென்மாந்திர வாசனைப்படியே பாவாதி களையே சாதனமாகச்செய்து வருவார்களென்றும் அருளிச்செய்திருக்கிறதே பாதகமுதல் பஞ்சமகா பாதகம்வரையும் திரிகரணத்தாலும் செய்துவந்த வர்களிடத்தில் அவர்கள் கொஞ்சமாவது புண்ணி யஞ்செய்ததாக அருளிச்செய்யவில்லையே அப் படி யுகைத்தில் அனுபவம் தோற்றப்படவில்லையே என்ன ?

ஆசிரியர்:—அன்பனே! இப்போது நீசங்கித்த சங்கை நன்று அதனையருள்செய்வோம் கேட்பா யாக, சென்மாந்திரங்களில் மேற்சொல்லிய பாவிக ளெல்லாம் பாவம் அகண்டமாகவும், புண்ணியம் அணுவாகவும்செய்து அவற்றின்பிரயோசனத்தை நிரையத்தில் நெடுங்காலமனுபவித்து மீண்டும் நரக சேடத்தை யனுபவித்தற்பொருட்டு இவ்வுலகத் தில் புல்லாய், பூடாய், புழுவாய், மரமாய்ப், பல்மி ருகமாய்ப், பறவையாய், பாம்பாய், கல்லாய், பே யாய், வல்லசுரராய் இத்தியாதி சரீரங்களையெடுத் து ஆங்குள்ள துக்கங்களையனுபவித்துத் தொலைந் தவாறே பாவப்பிரஷ்டத்தோடு சகித்தற்கரிய ரோ காதி தாரித்திரம் முதலியவற்றை அனுபவிக்கு மா னிடராய் நம்பரமேசுரன் ஆக்ஞையால் தோன்று வார்கள். தோன்றினும் முன்சென்மாந்திரத்திலி ருந்த வாசனையின்படியே இச்சென்மத்திலும் பா வம் அகண்டமாயும், புண்ணியம் அற்பமாயும் செ

ய்துவருவார்கள், அதாவது, அபுத்திகாரணமாகத்
தன்னைப் புகழ்ந்தவர்களுக்கும், திரிகரணமொத்து
தன்னையடுத்தவர்களுக்கும் உதவிசெய்யாமற் போ
னால் வேறே யாருதவிசெய்யப் போகிறார்களென்
றெண்ணித் துர்க்கிர்த்தியத்தால் வந்தபொருளைக்
கொடுத்து அகங்கரித்துப் பெருமிதமுடையராய்
இருப்பார்கள் அவருள்ளும் அநேகர்கட்கு முன்
சென்மாந்திர புண்ணிய விசேடத்தால் ஒருகாலத்
தில் ஒருஸ்மரணைதோன்றும் அதாவதுஉலகத்திற்
சிலர் செல்வந்தராயிருத்தற்கும், சிலர் சரீரத்திற்
கொடியநோயில்லா திருத்தற்கும், சிலர் ராசாதிப
திகளாயிருத்தற்கும், சிலர்விசேடமாய்ச் செல்வமி
ல்லாது கொஞ்சஞ் செல்வமுடையராயிருத்தற்
கும், சிலர் உயர்ந்த பிராமணோத்தமராயிருத்தற்
கும், காரணமென்னவென்று எண்ணமுண்டாகும்
அதிலும் சிலருக்கு அந்த எண்ணமும் விடைய
பராக்கால்மாறும் அதுவும் எத்தனையோ சென்மா
ந்திரங்களில் நிலையுறும் அதிற் சிலர் இந்தப்பேதத்
தைத் திட்டமாகத் தெரிந்துகொள்ள வேண்டுமெ
ன்ற எண்ணமுடையவராக இருப்பார்கள். அதி
லும் சிலர் இப்போதே தெரிந்துகொள்ளவேண்டு
மென்றும் அதற்குரியார் யாரென்றும் ஆலோசிப்
பார்கள். அதிலும் சிலர் அதற்குரியாரையறிந்து
பெரியோர்களிடத்தில் இன்னவிதிபோடு போக
வேண்டுமென்ற விவேகமில்லாதவராய்ப் போய்க்
கேட்பார்கள், அதிலும்சிலர் தனக்குமேற்பட்டவி

வேகமுள்ளவர்களிடத்தில் பெரியோர்களிடத்திற் போகும் விதியறிந்து கேட்கப்போகும் சமையத்தில் தான்முன்செய்த தீவினையானது இவனைப்பெரியோர்களிடத்திற் செல்லவிடப்படாது என்று அதற்குரிய தீயோர்களைச் சேர்க்கை பண்ணுவித்து சிநேகிதனே! உனக்கென்ன பயித்தியமா? நீ எதற்காக அவனிடத்திற் செல்கின்றாய் நமக்குத்தெரியாதனாயம் அவனுக்குத்தெரிந்து விட்டதோ அவனிடத்திற்போனால் ஊர்களிலிருக்கிற விக்கிரகங்களையெல்லாம் கும்பிடச் சொல்வான் அதல்லாமலும் தானதருமங்களைச் செய்யென்றும், ஆண்டிபரதேசிகளைக்கண்டால் கீழேவிழுந்து வணங்கவேண்டுமென்றும், பிறஸ்திரீகளை மனதினாற்கூட நினைக்கப்படாதென்றும், பொய்சொல்லக்கூடாதென்றும், பிறவுயிரைவதைக்கப்படாதென்றும், அவற்றின் ஊனை புகாப்படாதென்றும், கள்ளு, சாராயம், கஞ்சா, லேகியம், இது முதலாகிய லாகிரிவஸ்துக்களைச் சாப்பிடக்கூடாதென்றும், பிறர் நம்மைத் தண்டித்தாலும் அதற்குப்பதில் ஒன்றும் செய்யக்கூடாதென்றும் சொல்வதோடு இப்போது சொல்லிய புண்ணிய கிருத்தியங்களெல்லாம் பிரயோசனத்தைக் கருதிச்செய்தால் புண்ணியலோகப்பிராப்தியும் இவ்வுலகத்தில் சுகபோகங்களையனுபவிக்கும் சுகசம்பத்தையும் உண்டுபண்ணுமென்றும், இதனையே நிஷ்காமியமாகச்செய்தால் சித்தசுத்திவருமென்றும், அதனால் சிவசரியைசெய்ய

விருப்பமுண்டாமென்றும், இதுவும் எத்தனையோச
சென்மாந்திரங்களில் நிலையுறுமென்றும், அதனால்
கிரியைசெய்ய விருப்பமுண்டாமென்றும், இது
வும் எத்தனையோ சென்மாந்திரங்களில் நிலையுறு
மென்றும், அதனால் யோகமுயற்சியுண்டாமென்
றும், இதுவும் எத்தனையோகோடி சென்மாந்திரங்
களில் நிலையுறுமென்றும் இதுமுடிவதற்குள் சரீரம்
விடில் சிவசாலோகாதிபதவிகளில் ஆங்குள்ளபோக
ங்களை நுகர்ந்து அவ்வுலகம் சங்காரப்படுங்காலத்தி
ல் அவ்வீசனருள்வருவதில் இவ்வுலகத்தில் சிரேஷ்
டம்பொருந்திய மகாத்துமாக்கள் வீட்டில் ஜெனி
த்து முனவிட்டகுறையை முடித்து ஞானத்துக்கு
ப்பக்குவராய் வருவார்களென்றும் மேல் சற்குருலா
பம்கிடைத்து கேட்டலாதிமுறையே நிறைவேறில்
இம்மையிலேயே பெறுதற்கரியபேரின்பசுகத்தைப்
பெற்று அதில் மூழ்கியிருப்பதுவே மோக்ஷம் என்
று சொல்வதோடு அதற்குச் சுருதிப்பிரமாணமுங்
காட்டுவர். இதுவெல்லாம் சுத்தப்பொய். ஏனெ
னில் சுருதியிற் சொல்லியதெல்லாம் ஒருமெய்ப்
பொருளை இன்னதென்று யுக்தி அநுபவங்களால்
விசாரித்துத்தெளிந்து சுருதியிற்சொல்லிய யுக்தி
அநுபவங்களுக்கொவ்வாத சாதனர்திரங்களைக்க
ற்பனையென்றுதள்ளி பாவபுண்ணியமென்று சொ
ல்வதெல்லாம் நம்மால் ஏற்படுத்திக்கொண்டது
தானென்று திடப்படத்தேறி தேகாதிகளாற் செ
ய்யுந் தொழில்களெல்லாம் நாம்செய்யவில்லை மன

மானது எப்போதுஞ் சாஞ்சல்லியப்பட்டுக்கொண்
டிருப்பதே சுபாவம் இதனையறியாது அதனையடக்
கச்சாதனுந்திரங்களைத் தேடுவதே அஞ்ஞானம்
உடலுள்ளவரைக்கும் சுகதுக்கமாகிய பிரார்த்வ
போகத்தை யனுபவித்தேபோகும் நாம் அடைய
வேண்டுவதுயாதோ அஃதெல்லாம் அடைந்து
முடிந்தது. செய்யவேண்டிய சாதனமெல்லாம்செ
ய்துமுடிந்தது. நாம் இனிமேல் ஒன்றுஞ் செய்ய
வேண்டுவதில்லை. கருவிகரணாதிகளெல்லாம் எப்படி
யெப்படிச் சஞ்சரிக்கவேண்டுமோ அப்படியப்படி
ச்சஞ்சரித்தாலும் அதனால் தோஷமில்லை தோஷ
முண்டென்றெண்ணுவதேபந்தம். இதுவே சென
னத்துக்குவித்து. சுருதிகளிற் சாதனுந்திரங்களைச்
சொல்வானேன் என்று சங்கை உண்டாமாயின்
ஒரு பூசனித்தோட்டத்தில் பூசனிக்காயின் அரு
மையைநோக்கி அத்தோட்டக்காரன் அவ்விலைக
ளால் மறைத்துவைப்பதேபோல மகான்களும் வே
தாகமமாகிய தோட்டத்தில் மெய்ப்பொருளென்
னும் பழத்தின் அருமையைநோக்கி சரியைகிரியை
யோக சாதனுந்திரங்களென்னும் இலைகளால் மறை
த்துவைத்திருக்கிறார்கள். இதனை அறிவுடையோர்
கள் சரியைகிரியையோக சாதனுந்திரமாகிய இலை
களைத் துச்சமென்றகழித்து மெய்ப்பொருளென்
னும் பழத்தையெடுத்து அனுபவிப்பதே மெய்த்
தவமாகும் இதுவே சுருதியின் அந்தரங்கக் கருத்
தாகும். இதனையறியாது சுருதியிற்சொல்லும் சற்

பனையாகிய கட்டெல்லாம் உண்மையென்றுநம்பி அச்சாதனம் வரவில்லையேயென்று எண்ணிக் கெட்டுப்போனபேர்கள் கோடானகோடியாகும் நீயும் போய்க் கெட்டுப்போகவேண்டாம் உனக்குச்சொல்லவேண்டிய புத்தியைச்சொன்னேன் உனக்கு யுக்தியுண்டானால் அறிந்துகொள்வாய் என்று கூறிய பரமார்த்தவாசகஞானிகள் பக்கலில் மயங்கிய சிலர் அதிலும் புண்ணிய சிரேஷ்டமுடைய சிலர் என்னவோ அறியாமை யுடையவர்கள் புலம்புகின்றார்கள் இந்தஞானத்தைப்பற்றி நம் தாயுமான சுவாமிகள் எடுத்து இகழ்ந்திருக்கின்றார்கள்.

கவி.

நானெனநிற்குஞான ஞானமன்றந்தஞான
மோனமாயிருக்கவொட்டா மோனமின்றாகவேதான்
தேனெனருசிக்குமன்பாற் சிந்தைதனைந்துருகும்வண்ணம்
வானெனநிறைந்தானந்த மாகடல்விளைவதின்றே.

இன்றெனவிருப்போமென்னி னென்றுஞ்சூனியமாமுத்தி
நன்றெனுதித்துமன்றி நாமுன்னேபெறுமவித்தை
நின்றதுபெத்தந்தானே நிரந்தரமுத்தியென்னி
னென்றொருவரைநான்கேட்க வுணர்வில்லைகுருவுமில்லை.

என்பதையொக்கும்

மகான்கள் லட்சணமாவது.

இங்கற்றபடியங்கு மௌனவறிவுநல்லறிஞ
ரெக்காலமும் முதவுவா

ரின்சொறவுறர் பொய்மையாமிழுக்குரையா
    ரிரங்குவார் கொலைகள்பயிலார்
சங்கற்பசித்தரவ ருள்ளக்கருத்திலுறை
    சாக்ஷிநீ யிகபரத்துஞ்
சந்தானகற்பகத் தேவாயிருந்தே
    சமஸ்தவின்பமு முதவுவாய்
சிங்கத்தையொத்தெனைப் பாயவருவினையினைச்
    சேதிக்க வருசிம்புளே
சிந்தாகுலத்திமிர மகலவருபானுவே
    தீனனேன் கரையேறவே
கங்கற்றபேராசை வெள்ளத்தின்வளருட்
    ககன வட்டக்கப்பலே
கருதரியசிற்சபையி லானந்தநிர்த்தமிடு
    கருணாகரக்கடவுளே.

என்னும் இப்பிரமாண வாக்கியத்தைக் கைக்கொண்டு அம்மாதவரைக்கண்டு விதிப்படி தரிசித்து உலகத்தில் செல்வந்தர்களாயுங் கொடியநோயில்லாதவர்களாயும் இருத்தற்குக் காரணமென்னையென்று அவர்கள்வினவ, அதற்கு அம்மகானருளிச்செய்ததை யாம் உனக்கு கீழ்வருமாறு அருளிச்செய்வோம் கேட்பாயாக.

—oo:o:oo—

சிவமயம்.

# புண்ணிய சுவர்க்கப்படலம்.

ஆசிரியர்:—அன்பனே! அச்செல்வர்களெல்லாம் பசுபுண்ணிய முடையராய் இகலோகபரலோக பிரயோசனத்தைக்கருதி தாங்கள் நல்வழியிலேயே ஈட்டியபொருளை தங்களாலியன்றமட்டும் இல்லையென்று சொல்லாது மனம்வாக்குகாயம் ஆகிய திரிவிதகாணமொத்து புண்ணிய க்ஷேத்திரங்களிலும், அஃதொழிந்தவிடங்களிலும், புண்ணியகாலங்களிலும், அஃதொழிந்த மற்றையகாலத்திலும், போசனத்தாலும், பொருளாலும், வஸ்திரத்தாலும், பிறருடைய மனசைத்திருப்தி பண்ணிவைத்தலும், தான் இல்லறத்துக்குச் சொல்லிய விதியோடு நின்றுகொண்டு துறந்தோர்களுக்கும், வறியோர்களுக்கும், வேண்டுவனகொடுத்தலும், ஒருவருமில்லாமல்வந்து இறந்தோர்களுக்கு நீர்க்கடன்முதலானவைசெய்து நல்லகதி யடைவித்தலும், பிரமச்சாரி, வானப்பிரஸ்தன், சந்நியாசி இம்மூவருக்கும் உணவினும், நோய்முதலியவற்றிற் கவிழ்தத்தினும், குளிருக்கு வஸ்திரங்களினும், அவரவர் ஒழுக்கங்களுக்கு இடையூறுவாராமல் நடப்பித்தலும், பிதிரர்களுக்கும், தேவர்களுக்கும், அதிதியர்களுக்கும், சுற்றத்தார்களுக்கும், அவரவர்க்குரியவை செய்துவைத்தலும், அஃதல்லாமலும், யாதாமொருவன் தன் திரவியத்தைக்கொடுத்து சத்தியங்

கள் செய்யும்படி செய்பவர்களும், சாந்திராயணவிரதமும், மாதஉபவாசமும் வாரவிரதங்களும், பக்கவிரதங்களும், நக்ஷத்திர விரதங்களும், வனாந்திரங்களிலிருந்துகொண்டு சுவர்க்கத்தைக்குறித்துசலபானம், வாயுபக்ஷணம், காய்கனிசருகு இவைமுதலியவைகளைப் பொசித்துக்கொண்டும் தவசிகளாய் பஞ்சாக்கினி மத்தியிலிருந்துகொண்டு தபசுகளைப் பண்ணுதலும், சுவர்க்கம்வேண்டுமென்று தீர்த்தயாத்திரை ஆலயதெரிசனம் ஆன்றோர்களாற் பாடலமைந்த ஸ்தலங்களில் வசித்தலும், சோடச மகாதானங்களைச் செய்தலும், கசதானம், அசுவதானம், கோதானம், பூதானம், கன்னிகாதானம், இன்னும் இதுமுதலிய தானங்கள்செய்தலும் பல்லக்கு ரதம், வாகனம், எருது, மெத்தை, ஆசனங்கள், வஸ்திரங்கள், நானாவிதமாகிய பாத்திரங்கள், அன்னதானங்கள், சத்திரங்கள், வித்தியாசாலைகள், தோப்புகள், உத்தியானவனங்கள், நந்தவனங்கள், இன்னும் இதுமுதலியவை செய்துவைத்தலும், வாவி, கூபம், தடாகமுதலிய வெட்டிவைத்தலும், நதிகளையுண்டாக்கலும் பிராமணாள் இருத்தற்கிடங்களையமைத்தலும், இன்னும் சுவர்க்காதிகளைக்குறித்து சிவாலயம், விஷ்ணுவாலயம இயற்றிப் பூசைசெய்வித்தலும் பாதைமார்க்கங்களில்மண்டபங்கள், மடங்கள் கட்டிவைத்தலும், தண்ணீர்ப்பந்தல் வைத்தலும், பிராமணர்களையும், பசுக்களையும், சலனமடைந்த துக்கிகள், ரோகிகள், தரித்திராள், அநாதர்கள்

முதலிய இவர்களையெல்லாம் ரக்ஷித்தலும் தீர்த்தக் கரையில்செய்கிற திதி திரவியத்தாலாவது, அன்னத்தாலாவதுபண்ணுதலும் காலைமாலை மத்தியானங்களிலே சூரியனைப்பார்த்து மந்திரஞ்செபித்தலும், அச்சூரியோபாசனைசெய்தலும், இன்னும் இவைமுதலிய உபாசனைகளைச்செய்தலும் கற்புடையவள் தங்கணவன் பித்தனாயினும், பேதையனாயினும், பிணியனாயினும், அழகில்லாதவனாயினும், கிழவனாயினும், பழவினைப்படிகுட்டரோயுடையவனாயினும், ஊமனாயினும், முடவனாயினும், செவிடனாயினும், குருடனாயினும், மூடனாயினும், அகங்காரமுடையனாயினும், தரித்திரமுடையனாயினும், இதுவே நமக்குக்கடவுள்கொடுத்த பாக்கியமென்று நினைந்துத் திரிகரணமொத்துப் பணிவிடைசெய்து வருபவளும் மேலாகிய பதவியை அடைவள். இன்னும் இதுமுதலிய தானதருமங்கள் அளவிறந்தனசெய்தவர்களும் ஈசுர ஆக்ஞையால் தேகாந்தத்தில் இந்தப் பூதசரீரத்தை விடுத்து புரியட்டக சரீரந்தானே யாதனாசரீரம்பெற்று அவரவர்செய்தபுண்ணியத்துக்குத் தக்கதாக சுவர்க்கபோக போக்கியத்தையனுபவிப்பார்கள். அதாவது ஒருவனுக்கு ஆயிரம் ஸ்திரீகளும், சிலருக்கு நூறும், ஐம்பதும், பத்தும், ஒன்றும் இன்னும் இதிலும் ஏற்றக்குறைச்சலுமாக அவரவர்செய்த புண்ணியத்துக்குத்தக்கதாக அனுபவித்துக்கொண்டு இவ்விடத்தில் தமக்குமேற்பட்ட செல்வமுள்ளவர்களைப் பார்த்துப்

பொறுமைகொள்ளுவதே போல் அவர்களும் தன
க்குமேற்பட்ட ஸ்திரீகளைக்கூடி அனுபவிப்பவரை
ப்பார்த்துப் பொறுமையுள்ள மனமுடையவராய்
அந்தப்போகங்களையனுபவிப்பார்கள். அதுவல்லா
மலும் வெகுமானமும் நிரம்ப ஏற்றக்குறைச்சலாக
இருக்கும். சிலர்களுக்கு இந்திரசபையும், சிலர்
களுக்கு இயமசபையும், சிலர்களுக்கு வருணசபை
யும், சிலர்களுக்கு குபேரசபையும், சிலர்களுக்கு
ரம்பை, திலோத்தமை, ஊர்வசி, மேனகையாகிய
பிரதானிகளாயிருக்கிற அக்ஷர ஸ்திரீகளினுடைய
போகமும், சிலர்களுக்கு அப்பிரதானிகளாயிருக்
கிற அக்ஷர ஸ்திரீகளினுடைய போகமும், இன்
னும் இவைபோன்ற நானாவிதமாகிய போகங்களும்
போசித்துப் புண்ணியமுடிந்தவுடன் தங்கள் தங்
கள் கழுத்திலே கிடக்கிற மாலைவாடும் வாடினவுட
னே தேவதூதர்கள் தலைகீழாகப் பிடித்துத் தள்ளி
விடுவார்கள் அதன்பின் புண்ணிய சேடத்தையனு
பவித்தற்பொருட்டு மானிடர்களாக இந்த வுலகத்
தில் சரீரத்தில் கொடிய நோயில்லாது செல்வந்த
ர்களாக அனேக சுகபோகங்களை யிஷ்டப்படி யனு
பவித்துக்கொண்டும் முன்சென்மாந்திர வாசனை
யின்படியே காமிய விச்சையுடையவருய் அநேக
மாகிய தானதருமங்களைச் செய்துக்கொண்டும்
இருப்பார்களென்ன அறிவாயாகவென்று அந்தப்பர
[illegible]சிரியர் அவர்களுக்குப்போதித்த வாக்கியமும் இது
ன்ன?

சீடன்:—சுவாமி! கொடியபாதகங்களைச் செய்தவர்கள் அதற்குப் பிரயோசனமாகிய நரகத்தை யனுபவித்து மீண்டும் நரகசேடத்தை யனுபவித்துப்பின்னும் மானிடராய்செனித்து பண்டையவாசனையின்படியே துக்கானுபவிகளா யிருப்பார்களென்றும் புண்ணியஞ்செய்தவர்கள் அதன்பிரயோசனமாகிய சுவர்க்கத்தை யனுபவித்து மீண்டு புண்ணியசேடத்தை யனுபவித்தற்பொருட்டு இவ்வுலகில் வந்து சுகத்தையுடைய சரீரிகளாய் சுகபோகங்களை யனுபவித்துக்கொண்டிருப்பார்களென்றும் அருளிச்செய்ததுவே முறையா இதுவல்லாமலும் பாவபுண்ணியத்தைச் செய்தவர்கள் அதற்குரிய பிரயோசனத்தை அனுபவித்தற்பொருட்டு இவ்விடத்திலேயே நாலுவிதமாகியசெனனங்களை யெடுப்பதாகவும் உண்டோ வென்ன ?

ஆசிரியர்:—அதாவது அவரவர்செய்த கன்மங்கள் அளவிறந்தனவாயிருத்தலால் அதனை யிப்படித்தானென்று வரையறுத்துச்சொல்லமுடியாது. நரகசுவர்க்கத்தை யனுபவித்துமீண்டும் நரகசுவர்க்கசேடத்தை யனுபவித்தலுமுண்டு. அதுவல்லாமலும் உன்னதமாகிய பதவியிலிருந்தவர்களும் பாவவிசேடத்தால் தாழ்ந்த அசராதிகளாய்ச் செனித்தலுமுண்டு தாழ்ந்த மிருகாதிகளாகவும் அசராதிகளாகவு மிருந்தவர்களும் ஓர் புண்ணியவிசேடத்தால் உன்னதமாகிய பதவியைப்பெறுதலுமுண்டு.

அதுவல்லாமலும் அதததற்குள்ளாகவே மாறிமாறிச் செனித்தலுமுண்டு. ஏனெனில், அனாதிதொட்டு ஆன்மாக்கள்செய்த கன்மங்கள் அளவிறந்தன அந்தக்கன்மங்கள் ஒவ்வொருகாலத்தில் பரிபாகப்படுவதுமுண்டு. அது எதுபோலென்னில், நாம் விதைத்த வித்துக்களானது நாலுநாள் பத்துநாளைக்குள்ளும் அல்லாமல் நாற்பது நாளைக்குள்ளும் அதுவல்லாமல் ஆறுமாசம், ஒருவருஷத்துக்குள்ளும், முளைத்தலும் பலன்கொடுத்தலுமுண்டு. இன்னும் அந்தந்த வித்துக்களுக்கு தக்கபடி ஏற்றந்தாழ்வாகவுமுண்டென்று அறிவாயாக. ஆனதுபற்றி கன்மத்தை அளவுபடுத்தமுடியா. இதற்குச்சாக்ஷியாக முன்னோர்களனுபவஞ் சொல்லுவோங் கேட்பாயாக, அதாவது அகலிகையானவள் சோரத்தன்மையால் கவுதமமுனிவனிட்ட சாபத்தால் வெகுநாள் கல்லாகக்கிடந்து மீண்டும் பழையவடிவாகியும் இந்திரனுகவந்த நகுடச்சக்கிரவர்த்தி சப்தரிஷிகளிலொருவராகிய அகஸ்தியமுனிவர் சாபத்தால் மலைப்பாம்பாகி மீண்டும் பழைய வடிவாகியும் ஓர் மல்லிகார்ச்சுன பர்வதத்தில் குமாரதேவர் முற்பிறவியில் நிஷ்காமிய தவஞ்செய்கையில் அந்தச்சுவாமிகளோடுகூடவே வேறொருவர் தவஞ்செய்து கொண்டிருக்க அவர் தவத்துக்கிரங்கி பரமேஸ்வரன் அம்மாதவரைநோக்கி வேண்டுவ தென்னவென்று ... வவர் ஒன்றைக்கருதி மற்றொன்றைக்கேட் ...மேஸ்வரன் முனிவால் சடாமுனியா

கிமீண்டும் பழையவடிவாகியும் இன்னும் இப்படி யனேக முள்ளனவென்று சொல்லக்கேட்டேன் இப்போது சுவாமிகள் சொல்லியவையெல்லாம் சாபத்தால் ஒன்றிலொன்று மாறியதேதவிர கன்மத்தாலல்லவேயென்ன?

ஆசிரியர்:—சாபமுங் கன்மத்தாலன்றி யில்லையென்றுணர்வாயாக சாபத்தாலன்றி புண்ணியகன்மத்தால் ஓர்திவ்விய ஆலயத்தில் சுவாமிசன்னிதானத்தில் எரிந்தவிளக்கை அணையுஞ் சமயத்தில் அணையாமல் ஒரெலியானது தன்மூஞ்சியால்தூண்டிய புண்ணிய விசேஷத்தால் மாபலிச்சக்கரவர்த்தியாகச் செனித்ததென்றும், ஓர் தாசியானவள் ஓர் பக்குவிக்கு எச்சில்சாதத்தைப் படைத்தாளென்றும், எச்சிலிட்ட பாவவிசேடத்தால் நாயாய்ச் செனித்தாளென்றும், அச்சாதத்தை அவர்பசிப்பிணிநீங்கிய புண்ணியவிசேடத்தால் ஸ்ரீபத்திரகிரியடிகள் பிரசாதம் கிடைக்கப் பெற்றாளென்றும் அப்பிரசாத மகத்துவத்தால் காசிராசனுக்குப் பூர்வக்கியானத்துடனே புத்திரியாகச் செனித்துப் பின் சுவாமிகளிடத்துக்குவந்து அவரோடு சோதியில் ஐக்கியமானாளென்றும் இன்னும் அநேகமுள விரிக்கிற்பெருகும் அதுவல்லாமலும் இவ்விடத்தில் பிரத்தியக்ஷமாக யாவராலு மறியத்தக்க அனுபவமு மொன்றுளது. அஃதாவது வேட்டுவனென்னும் வண்டானது புழுக்கூட்டத்தில் புழுக்களை

யடித்த அடியால் மூர்ச்சையாகிய புழுவையெடுத்துத் தன் எதாஸ்தானத்துக்குக் கொண்டுபோய்த் தன் சத்தத்தால் தன்வடிவாய் ஆக்கிக்கொள்வது உண்மையல்லவாயென்று முன்சொல்லிய முன்னோர்கள் அனுபவத்தையும் இப்பிரத்தியக்ஷபிரமாணத்தையும் விளக்கியதுபோதாதென்று இன்னும் சுருதிப்பிரமாணத்தையும் நன்குவிளங்கும் வண்ணம் பரமபிதாவாகிய சற்குருநாதன் அருளிச்செய்கின்றார்.

## சிவஞான சித்தியாரில்.

பூதனுசரீரம்போனாற் புரியட்டதேகந்தானே
யாதனுசரீரமாக வின்பதுன்பங்களெல்லா
நாதனாராணையுய்க்க நரகொடுசுவர்க்கந்துய்த்துத்
தீதிலாவணுவாயோனி சேர்ந்திடுஞ்சீவனெல்லாம்.

உடல்விடாயோனிபற்றி யுதிப்பினுமுதிக்குமொன்றிற்
படர்வுறாதழும்பாகத்தாற் பாடாணம்போற்கிடந்து
கடனதாங்காலஞ்சென்றாற் கடுநரகதனில்வீழ்ந்தங்
கிடருறுமுருவங்கன்மத் தளவினிலெடுக்குமன்றே.

வண்டுகளாகிமாறு மயிர்க்குட்டிமற்றோர்சென்றுப்
பண்டையவுருவந்தானே வேட்டுவனாய்ப்பிறக்குங்
கண்டுகொள்யோனியெல்லாங் கன்மந்தான்மாறுமென்றே
கொண்டனசமயமெல்லா மிச்சொனீகொண்டதெங்கே.

அகலிகைகல்லதானா ளரிபலபிறவியானான்
பகலவன்குலத்திற்றோன்றிப் பாரெலாமுழுதுமாண்டு
திகரிலாவரசனாருஞ் சிலந்திகீடலகம்போற்றச்
சகமதிலெலிதானன்றோ மாவெலியாயினானே.

செப்பினுய்மாறவேறு சிலர்விதியாலேசன்மால்
வைப்புறும்யோனியெல்லா மாறிவர்திடாவிங்கென்னி
லெப்படியானுஞ்செய்திக் கிறைகரியாவனென்றே
முற்படமொழிந்தேனெல்லா முதல்வன்றன்விதியேயாகும்;

இன்னும் புட்பவிதியினும்,

கொந்தலர்கொய்யும்போது கூர்விழிமையலாலே
பைந்தொடிமடவார்தம்மைப் பார்த்தலாற்கைலைவெற்பிற்
சுந்தரன்பட்டகாதை யறிதிரேதுணர்மென்போதால்
அந்தணர்கீழ்களாவார் கீழ்களந்தணர்களாவார்,

இன்னும் இப்படிச் சுருதிப்பிரமாணங்கள் அநேகம் உண்டென்று சுவாமிகள் சீடனுக்குப் போதித்துக்கொண்டிருந்ததை அந்த ஆரணியத்தில் ஓர் உலகாயுதன்பார்த்து சுவாமிகள் வாக்கியத்தில் நம்புதலில்லாதவனாய் நகைத்து ஆணவமயக்கத்தாற் சொல்லுவதாவது, முன்சென்மாந்திரங்களில் பாவபுண்ணியஞ்செய்தவர்கள் அதன் பிரயோசனமாகிய நரகசுவர்க்கத்தை யெங்கேயோ போய் அனுபவித்து மீண்டும் திரும்பி நரக சுவர்க்கசேடத்தை இவ்விடத்திலேவந்து அனுபவிப்பார்களென்றும், அதுவல்லாமலும், கன்மம் அளவிறந்தனவா யிருந்தலால் இவிடத்திலேயே அதற்குரிய செனனங்களையெடுத்து அதன்பிரயோசனங்களை அனுபவித்தாலும் அனுபவிப்பார்களென்றும் சொல்லுவதெல்லாம் சுத்தப்பொய். எவனோ பயித்தியக்காரன் தானில்லீறிய கோட்டியை மெய்யென்று நம்பி மோசம்போகாதீர்கள். இப்படிக்

கெட்டவர்கள் அநேகம்பேருண்டு. பாவபுண்ணியத்தைக் கண்டதார், நரகசுவர்க்கத்தைக் கண்டதார். நாம் இப்போது பிரத்தியக்ஷமாகக்கண்டதே காக்ஷி. கொண்டதேகோலம். ஓப்பெரியவரே ! இப்படியறிந்துபிழையும் என்றுசொல்லி அதோடும் விடாமல் இங்ஙனக்கொலையால் வரும்பாவமானது என்செய்யும் என்றுவினவ.

ஆசிரியர்:—பாவிகள், புகழும் பெரியோய் ! கேட்பாயாக, நெடுநாள் நீங்குதற்கரிதாகிய மகத்துவமுடைய துன்பத்தைத்தரும் என்ன.

அதற்கவன் ஒருவன் கொலைசெய்தவுடனே அதனால்வருந் துன்பத்தை யனுபவிக்கக்கண்டிலோம் என்ன.

அதற்கு அவர் இம்மையில் ஜீவகொலைபண்ணினவன் இம்மையிலேயே துன்பங்களை யனுபவியாவிடினும், சரீராந்தியத்தில் நரகத்தையடைந்து மகாதுயரங்களை யனுபவித்துப்பின்னும் நரகசேடத்தினாற் பூமியின் கண்ணேதோன்றி அந்தச் சேடபலமாகிய துக்கங்களையும் இவ்விடத்திலேயே யனுபவிப்பானென்பதே நிச்சயம். அஃதெதன் போலெனின், ஒருவேளாண்மை செய்தவனுக்கு அதன்பலமானது காலவாதியிற் புசிப்புமாய், மேலைக்கு வித்துமானதுபோல வெனக்கொள்க.

## இதற்குமேற்கோள், சிவஞானசித்தியார்.

மேலைக்குவித்துமாகி விளைந்தவையுணவுமாகி
ஞாலத்துவருமாபோல நாஞ்செயும்வினைகளெல்லா
மேலைத்தான்பலமாச்செய்யு மிதமிந்தங்கட்கெல்லா
மூலத்ததாகியென்றும் வந்திடுமுறைமையோடே.

என்றும்,

இம்மையில்செய்த கொலையானது சரீராந்தியத்தில் வருத்துமென்பதற்குப் பிரமாணம்.

## குறள்.

உயிருடம்பினீக்கியாரென்பர் செயிருடம்பிற்
செல்லாத்தீவாழ்க்கை யவர்.

அன்றியும்,

கொல்லாமைமேற்கொண் டொழுகுவான்வாழ்நாண்மேற்
செல்லா துயிருண்ணுங் கூற்று.

என்றும்,

## திருமூலர்.

கொல்லிடுகுத்தென்று கூறியமாக்களை
வல்லடிகாரர் வலிக்கயிற்றாற்கட்டிச்
செல்லிடுமென்று தீவாய்நரகிடை
நில்லிடுமென்று நிறுத்துவர்தாமே.

என்றும்,

உற்றிடுவருணைத்துறைய னைந்தினையுமுயிர்க்கிரங்க
மற்றவரைத்தந்தம்மை யவலமெனத்தெற்றானைத்
துற்றினருமற்றமுள கொலைபுரிந்துறிசனரும்
பற்றிலாபடர்துயர்க்குக் கடுந்தூதர்வலைப்பட்டே.

என்றும்,

எவ்வுயிரும்பராபரன் சந்நிதியதாகு
மிலங்குமுயிருடலனைத்து மீசன்கோயில்
எவ்வுயிருமெம்முயிர்போ லென்றுநோக்கி
யிரங்காதுகொன்றருந்து மிழிவினோரை
வவ்வியமதூதருந் தண்டஞ்செய்து
வல்லிரும்பையுருக்கியவர் வாயில்வார்த்து
வெவ்வியதீயெழுநரகில் வீழ்த்திமாறு
வேதனைசெய்திடுவரென வோதுநூலே.

என்றும்,

இந்நோய்நமக்குண்டென் றெண்ணாதேயெவ்வுயிருங்
முன்னேவைக்கொன்றுண்ணு மூர்க்கர்தா—மெந்நோவும்
பண்ணப்படுநரகிற் பாவிகளிற்பாவிகளென்
றெண்ணப்படுவா ரிசைந்து.

நரகசேடமானது மறுசென்மத்திலுந் துக்கந் தருமென்பதற்குப் பிரமாணம்.

## சிவதருமோத்தரம்.

கருவினுளழிவன்முற்றிக் கழிந்துடனழிவன்காளைப்
பருவமுற்றழிவனீசை பகர்ந்துபின்னுதவாப்பாவி
பெருவலைக்கண்ணியாலும் பிடித்துயிர்வதைத்தபேதை
கருதியபொருளைத்தக்கோர்க் குதவிடான்றிளைத்தமையன்.

அன்றியும்,

அவையவமனைத்துங்குன்றி யழிந்திடுமொக்கையாறான்
சுவையினைவிரும்பியுண்ட துட்டர்கள்சோலைதன்னைத்
திவலையதிரைநீர்தேங்குந் திண்ணியதிரந்தன்னை
யவமதியாலேசால வழித்திடுமெற்பர்தாமும்.

என்றும்,

## நாலடியார்.

இரும்பார்க்குங்காலராய் ஏதிலார்க்காளாய்க்
கரும்பார்கழனியிற் சேர்வர்—சுரும்பார்க்குங்
காட்டுளாய்வாழுஞ் சிவலுங் குறும்பூழுங்
கூட்டுளாய்க்கொண்டு வைப்பார்.

அன்றியும்,

அக்கேபோலங்கை யொழியவிரலழுகித்
துக்கத்தொழுநோ யெழுபவே - யக்கா
லலவனைக்கான்முறித்துக் காதலித்துத்தின்ற
பழவினைவந்தடைந்தக் கால்.

என்று அருள்செய்ய,

அதற்கவன் துன்பத்தை யனுபவிப்பனென்று துணிந்ததற்குக் காரணம் என்னேவென்ன ?

அதற்கவர் ஒருவன்செய்த வலிய தீவினைகளானவை மறுமைக்கண்வந்து நரகத்திலழுத்துமாயினும் இம்மையினும் வருத்துவதாகிய தம்முடைய வேகத்தைக்காட்டும் என்று மறைமொழி கூறுகையால் அவ்வுரையின்படியே மிகுத்தபாவத்தின்வேகமானது செய்தவுடனே ஒருவனை வருத்தக்காணுதலின் மறுமைக்கண் நரகத்திலழுந்துமென்பதே சத்தியம். வேகமானதுயாதெனின், விஷத்தை யுண்டான் ஒருவனை அந்தவிஷமானது வருத்திக்கொல்லுதலின் முன்பே நெடிதுயிரொன்றுதல் போலவும், நெருப்பினாற் சுடுண்டான ஒருவனுக்கு அது புண்ணாவதற்கு முன்பே எரிதல்போலவும்,

சிவத்துரோகாதி அதிபாதகமும், பிரமஹத்தியாதி மகாபாதகமும், மறுமைக்கண் எரிவாய் நரகமாதிய நரகத்திலழுந்துதலின்முன்பே, இம்மையிற் செய்தவுடனே சித்தப்பிரமையாதிதுக்கங்களும், பிரமஹத்தியாதி துக்கங்களும் அடைதலி லெனக் கொள்க. இதற்குப்பிரமாணம்.

தேவாரம்.

குற்றொருவரைக் கூறைகொண்டு
கொலைகள்சூழ்ந்த களவெல்லாஞ்
செற்றொருவரைச் செய்ததீமைக
ளிம்மையேவருந் திண்ணமே
மற்றொருவரைப் பற்றிலேன்மற
வாதொழி மடநெஞ்சமே
புற்றரவுடைப் பெற்றமேறி
புறம்பயந்தொழப்போதுமே.

என்றும்,

சசிவன்னபோதம்.

மிகமேவிய புண்ணியபாவமெனும்
வினையின்பயன் வேறொருகாலமுறு
திகமேவருமென்பதனு னலைரோயெல்லா
மிவணைச்செற வெய்தினவே.

என்றனர்,

அதற்கவன் அப்படி. இம்மைக்கண் ஒருபாவத்தைச்செய்தவன் சரீராந்தியத்தில் நரகத்தை

யநுபவிப்பானென்று நீர்சொல்லுகிறது கூடாது. அஃது எத்தாலெனில், இவ்விடத்திற் பாவாதிகளைச்செய்தவன் இறந்துபோகவும், அவனைத்தகனம்பண்ணிப்போடவும் காண்கையால் என்றனன்.

அதற்கவர் புண்ணியபாவங்களைப்பண்ணினவன் அவற்றினது பலன்களைச் சுவர்க்க நரகத்தின் கண்ணே அநுபவித்தற்குச் சரீராந்தியத்திற் பாவப் பருவமானால் பூததேகமும், புண்ணியப் பருவமானால் பூதசாரதேகமும், யமதூதர் ஒருகணத்திலே உண்டுபண்ணுவார்கள். அந்தச்சரீரஞ்சுகதுக்கானுபவத்தைப் பொருந்துமென்று அறிவாயாக.

### இதற்கு உதாரணம் சிவதருமோத்தரம்.

அருந்துயர்க்குழியினூழ்வா நரகமேபாவத்தாகும்
பொருந்தியபூதத்தாலே யிமைத்திடும்போதுதன்னுட்
புரிந்துவிண்புகுவாராகம் புண்ணியத்தாலேயாகும்
பொருந்தியபூதசாரத் தொருகணப்பொழுதுதன்னில்,

என்றனர்,

அதற்கவன் ஒருவன் இம்மையிலே செய்த பாவத்துக்கு ஏதுவாய் மறுமையிலே ஒரு சரீரத்தை உண்டுபண்ணி நரகத்தில் வாதிப்பரென்பது எத்திறுக் கொக்குமென்னில், குற்றஞ்செய்தவன் தப்பிப்போகக் குறுக்கேவந்தவனையாய்மேலடித்தானென்பதுபோலும், இப்படி அநேகமாக உலகத்தின்கண்ணே சொல்லும் பரியாச வார்த்தைகளுக்கு ஒக்கும். இந்தச்சரீரஞ்செய்த பாவத்திற்கு

அந்தச்சரீரம்வாதைப்படுமென்றீர் அதற்கும் இதற்குஞ் சம்பந்தம்யாது என்றனன்.

அதற்கு அவர் அந்தச்சரீரத்தின்கட் சென்றுபுகும் இந்தச்சரீரத்தினின்றும் புண்ணியபாவங்களுக்கு ஏதுவாகிய இதாஹிதங்களைப் பண்ணினவனுடைய அறிவு இதற்கு உதாரணம்.

திரணஜலௌகைபோற் சீவன்றீண்டியே
வருமுருவதனைமுன் னுடலைமாற்றிடுங்
தருமமேபருவமேற் சாரும்வானினைப்
பருவமேற்றீவினை நிரயம்பற்றுமே.

என்றனர்,

அதற்கவன் அப்படி ஒரு சரீரத்தின்கண்ணே மற்றொருசரீரத்தின் கண்ணுண்டாகிய அறிவு சென்று புகுமென்னுமிடத்துத் தருணப்பருவத்தை இச்சித்துடைய ஒரு விருத்தன் ஒருதருணப்பருவன் இறக்கக்கண்டவிடத்து அவனது சரீரத்தில் பாய்தல்வேண்டும். அஃதில்லாமையின் ஒரு சரீரத்தின் அறிவு மற்றொரு சரீரத்திற் புகுமென்றல் கூடாது என்றனன்.

அதற்கவர் இவ்விடத்தும் பரகாயப்பிரவேசம் பண்ணுவாருமுண்டு என்றனர்.

அதற்கவன் அப்படிப் பரகாயப்பிரவேசம் பண்ணுதல இவ்விடத்துநாங்கண்டேமில்லை. அதுவும், அம்மிபறக்கக் கண்டோமென்பதுபோலும் உலக கற்பனைகதையென்றனன்.

அதற்கவர் அப்படிப்பரகாயப்பிரவேசம் பண்ணுதல் இப்பொழுது இவ்விடத்தில்காணாமையால் கற்பனைகதை யென்றாயாயினும், நாடோறும் யாமெல்லோருஞ் சொப்பனத்தின்கண்ணே இந்தத் தேகத்தைவிட்டு வேறொருதேகத்திற்பாய்ந்து எவ்விடத்தும் சஞ்சரித்தலால், ஒரு சரீரத்தின்கண் இருந்துள அறிவு மற்றொருசரீரத்தின்கண் கன்மத்தாற் சென்று புகுமென்பதே உண்மையென்றறிவாயாக.

இதற்கு உதாரணம் சிவஞானசித்தியார்.

பன்னகமண்டசங்கள் பாகாயந்தன்னிற்பாய்வோர்
துன்னுதோன்முட்டையாக்கை துறந்துசெல்வதுவேபோல
வுன்னியவுயிர்கலே வுடல்விட்டொன்றினோடு
மன்னிடுநனவுமாறிக் கனவினைமருவுமாபோல்.

இன்னும் இப்படி அநேகம்உண்டென்க. கொலைத் தீமையையுடையார் நரகம் அநுபவிக்குமிடத்துத் தத்தம் பாவத்தளவிற்குத்தக்க அவ்விடத்துண்டாகிய ஒரு பூததேகத்தைப் பொருந்துவரென்று சாதித்தோம் என்க.

அதற்கவன் சொர்ப்பனத்தின்கண் வேறொரு சரீரம்வந்து பொருந்துமென்ற வார்த்தைப்பழுது. கனவிலே தோன்றுவதெல்லாம் நனவின்கண் கண்ட நினைவாகுமென்றனன்.

அதற்கவர் இவ்விடத்து நம்மால் இச்சிக்கப்பட்ட இந்தச் சரீரத்துக்கு ஒருகாலும் ஆகாயத்

திற் பறக்குந் தன்மையின்மையானும், கனவின் கண்ணே தோன்றிய சரீரத்துக்கு ஆகாயத்திற்பறக்குதல் இயல்பாய்ப் புதுமையும், அதிசயமுந் தோன்றக்காண்டலினானும், பிரமாவாதியாகிய தேவதைகளுக்குண்டாகிய பலமுகமுதலிய உறுப்புகள் நமக்குக்கனவின்கண் உண்டாகாமையானும், சொப்பனதேகத்தை இச்சரீரத்தின்கண் கண்டு கேட்டிருந்தமையால் அந்த நினைவென்குதல் கூடாது. அஃதெப்படியெனில், சொர்ப்பனதேகம் பறக்கக்காண்கையானும், இத்தேகத்துக்கு அஃதில்லாமையானும், கண்ட நினைவல்ல. அல்லது தேவதைகள் ஆகாயகமனம் பண்ணுவார்களென்று கதைகளிற் கேட்டநினைவென்னின் புராணங்களிற் பிரமாவாதி தேவதைகளுக்கு அநேக முகங்களும், அநேகங்கண்களும், அநேகங் கைகளும் உண்டென்று கேட்டிருக்கின்றோம். ஆகையால் அவ்வடிவமும் நமக்குச்சொர்ப்பனத்தின் கண் பொருந்தல் வேண்டுமே அஃதில்லாமையால் கேட்ட நினைவுமல்ல, ஆதலிற் சொர்ப்பனத்தின்கண் வேறொருதேகம் வருமென்பதே சத்தியம். இதற்கு உதாரணம்.

இவ்வுடல்கனவூடெங்கு மியங்குருவலவன்றென்ப
தவ்வுடல்பறத்தலாற்கண் டனநினைவல்லவாரு
மெவ்விமிலிமையோர்கேள்வி நினைவெனிலிந்திராதி
திவ்வியருக்கொளோமாற் றிகழ்தருவுருவேறென்னே.

என்றனர்,

அதற்கவன் அப்படிச் சொப்பனத்தின்கண் இவ்விடத்திற் காணாதன கண்டோமாயினும், அதுவும் இத்தேகத்தின் குணமல்லது வேறொருதேகமென்பது கூடாது. ஆதலின் ஒரு தேகத்தின் குணம் மற்றொருதேகத்தின்கட்சென்று பொருந்துவதேயில்லை. உண்டெனில் ஒருரத்தினத்தினது காந்தி மற்றொருரத்தினத்திற் சென்று பொருந்த வேண்டும். அஃதின்மையால் இச்சரீராந்தியத்தில் இதனுடைய குணமாகிய அறிவு வேறொருதேகத்திற்சென்று புகுவதுமில்லையென்றனன்.

அதற்கு அவர் நீ ஒன்றின்குணம் ஒன்றிற்சென்றுபுகாதென்பது ஒக்கும். இங்ஙன முண்டாகிய அறிவு இத்தேகத்தின்கண் கன்மவசத்தாற் பொருந்தி யிருந்துள்ள ஓரான்மாவினுடைய குணம் என்றனர்.

அதற்கவன் நீர் இங்ஙனம் இத்தேகத்தின்கண் இதற்கு அந்நியமாய் ஒருசீவனுண்டென்பது கூடாது. அதேனெனில் இங்ஙனம் காணப்பட்டுள்ள பிருதிவி, அப்பு, தேயு, வாயு என்னும் இந்த நான்கு பூதமும் நித்தியமாயுள்ளன. அவற்றுள், வாயு சலனகுணத்தை யுடையது. ஆகையால் மற்றை பூதங்கட்கு அதனோடு கலப்புண்டாகுதலின் இச்சரீராதிகள் தோன்றும். அப்படித்தோன்றின வென்பது எதனாற் கண்டதென்னில், மண்குடனமாயிருத்தல் போலச் சரீரத்தில் என்புதோலாதி

கள் கடினமாய் மலந்தடித்துவீழ்தலினாலும், சலம் மலநெகிழ்ந்து பதஞ்செய்தலின் இரத்தாதிகள் நெகிழ்ச்சி யுடையனவாய்ச் சலம் வீழ்தலினாலும், நெருப்புச்சுட் டொன்றுவித்தலின் உதராக்கினி அன்னபானாதிகளைச் சுட்டொன்றுவித்துத் தொக்கின்கண் வெப்புத் தோற்றுதலினாலும், வாயுச் சலித்துத் திரட்டுதலின் இச்சரீரத்துக்கு ஓடுதலாதி சலனத்தைப்பண்ணி நாசியாதிகளின் இயக்கங் காணுதலினாலும், அந்தப்பூதக்கலப்பு இந்தச் சரீரமென்பது பிரத்தியட்சம் பாக்கு, வெற்றிலை, சுண்ணாம்பு மூன்றுங் கூடினவிடத்தில் ஒரு சிவப்புத் தோன்றுதல் போலப் பூதசையோகத்தினால் முன்பிலாத மனமுந் தோன்றும். இதுவன்றி நீர் இந்தச்சரீரத்தில் ஒரு ஆன்மா உண்டென்னில் இப்படிப் பிரத்தியட்சமாகக்காணவேண்டும். அப்படிக் காணப்படாமையின் ஆகாசத்தாமரைப்பூவும், முயற்கொம்பும், ஆமைமயிரும், மணலிற்றயிலமும் உண்டென்பதையொக்கும். ஆதலின் ஆன்மாஉண்டென்பதேயில்லை. இவ்விடத்துத்தோன்றும் உணர்வெல்லாம் தேககுணமே யென்றனன்.

அதற்கவர் நீ இந்தத்தேகத்தின் குணம் அறிவென்னு மிடத்துப் பிணமான அவதரத்தில் தேகங் கிடக்கக்கண்டோம். உணர்வு அங்ஙனங் கண்டிலேம். ஆதலின்உணர்வு தேகத்தின் குணமென்பது கூடாது என்றனர்.

அதற்கவன் பிணமான சரீரத்தில் வாயு நீங்குதலால், அக்கினி அவியும். அப்பொழுது அறிவுங் கெடும். அவைகள் நீங்கியது எவ்விதத்தாற் கண்டதென்னில் பிணத்தினுசியிற் காற்றுங் கண்டிலேம். தொக்கில்வெப்பமுங்கண்டிலேம். ஆதலின் அவைகள் நீங்கியது உண்மை. நீங்குதலின் சரீரத்தின்கண் அறியாமையடையும் என்றனன்.

அதற்கு அவர் நீ இங்ஙனம் பிணமானகாலையில் நீங்குமென்றவாயு உறக்கத்தின்கண் நீங்காதேயிருக்கவும், அப்பொழுது தேகத்தின்கண்ணே பாம்பு ஏறிவருதலுஞ், சத்துரு வருதலும், சரீரம் அறியாமே கிடந்தலால் வாயுநீங்க அறிவுகெடுமென்பதுகூடாது. ஆதலிற் கன்மவசத்தால் அவத்தைகடோறும் ஒடுங்கியும் உணர்ந்தும் வருவானோர் ஆன்மாவுளனென்று அறிவாய். ஞானப்பிரகாசமின்றி இருளடைந்த புத்தியினையுடையோய் என்றாம்,

இதற்குமேற்கோள் சிவஞானசித்தியாரில்.

உடலின்வேறுயிரேனிந்த வுடலன்றோவுணர்வதென்னி
னுடல்சவமானபோது முடலினுக்குணர்வுண்டாகு
முடலினுள்வாயுப்போனா லுணர்ச்சியின்றுடலுக்கென்னி
லுடலினுள்வாயுப்போகா துறக்கத்துமுணர்வின்றே.

என்றாம்,

சிவப்பிரகாச வெண்பாவில்.

உடம்புநீயல்லை யுறக்கத்திலெல்லா
மடங்கப்பிணமாகையாலே திடம்படவும்
வேறுதானுண்டோ விடாதேயருந்துகின்ற
சோறுகாண் காயச்சுவை.

என்றும் அருள்செய்தனர்.

அதற்கவன் சரீரத்துக்கு அந்நியமாய்ஓர்சீவன் உளனென்றும், நரகசுவர்க்க முண்டென்றும், அறிந்துகொண்டு இதுவரையும்சுவாமிகளோடு அறியாமையினால் எதிர்த்து வினவிய குற்றத்தைப் பொறுத்தருளவேண்டுமென்று சுவாமிகள் திருவடியில் விழுந்தனன்.

அதற்கவர் கீழேவிழுந்து கிடக்கும் உலகாயுதனை எழச்செய்து அன்பனேகேள்! இதுமுதற்கொண்டு என்னிடத்திற் சங்கித்ததுபோல் வேறே எந்த இடத்திலும் துர்வாசனையாகிய சங்கையைச் சங்கித்தல் கூடாது. அதுவல்லாமலும் பெரியோர்களைக்கண்டால் அவர்களை நம்பரமேஸ்வரனென அன்போடு வழிபட்டு அவர் குறிப்பின்படி நடந்துகொள்வதே உத்தமமாகிய புண்ணியமென்று அறிந்து நடந்துகொள்ளென்று ஆக்ஞாபித்தருள அவ்வாக்கியத்தைக் கைக்கொண்டு அவ்வுலகாயுதன் போனபின்னர்.

சீடன்:—உலகாயுதனுக்குச் சற்புத்தி புகட்
ருவே! இதுவரையும் தேவரீரருளிச்செ

ய்த வாக்கியத்தை சந்நிதானத்தின் கிருபாவீக்ஷணியத்தால் அறிந்துகொண்டேன். இன்னும் அடியேன் கேட்கும் விண்ணப்பம் ஒன்றுளது. அதாவது பாவபுண்ணியஞ் செய்தவர்கள் நரகசுவர்க்கத்தை யநுபவித்து மீண்டு அவரவர்கள் கன்மத்துக்குரிய சரீரபேதங்களாகத் தோன்றுவார்களென்று அருள்செய்திருக்கிறதே தவிர, அவர்கள் இன்னவிதமாக வந்து நானாவிதங்களாகிய சரீரபேதமாகத் தோன்றுவார்களென்று அருளிச்செய்யவில்லையே அதன் விபரத்தை அடியேனுக்கு அநுக்கிரகஞ்செய்யும்படி கேட்டுக்கொள்ளுகின்றேன் என்ன.

ஆசிரியர்:—சுவர்க்கலோகம் வாயுவினாற் கட்டப்பட்ட வுலகம். அதுகடினமாகப் பூமிபோல புண்ணியவான்களைத் தரித்துக்கொண்டிருக்கும். புண்ணியக்ஷயமானவுடனே வாயுவெளியாய் அவனைத் தரியாமல் வெளியாங்கிப்போகும். புண்ணிய புருஷனானவன் புண்ணியக்ஷயமானவுடனே வாயு வேகத்தினாலே கீழேவிழுவன். அப்போது பூலோகத்திலே நக்ஷத்திரம் விழுந்ததென்று கண்ணுக்குத் தெரியவரும். விழுகிறவனுடைய நக்ஷத்திரங்களாகிய சரீரம் ஆகாசவருணம்போல உருகிப்போய்க் கீழே சூக்ஷுமமாகவிழுவன். விழுகிறபோது சமுத்திரங்களிலாவது, நதிகளிலாவது, காடுகளிலாவது, பருவதங்களிலாவது, பூமிகளிலாவது, பயிரா

திகளிலாவது, தடாகங்களிலாவது, பூர்தோட்டங் களிலாவது, வாவிகூபங்களிலாவது, கருமானுசார மாக விழுவன். இன்ன இடத்திலே விழுவனெ ன்று நிச்சயமில்லை. விழுகிறபோது நல்லவாளிடத் திலேபோய்ப் பிறக்கவேண்டுமென்று பிரார்த்திப் பன். அந்த நக்ஷத்திர தேவசரீரம் உருகிப்போன பிறகு சூக்ஷுமதேகத்தோடே விழுவன். போன சொரூபமாகவே திரும்பவருவன். அந்தச் சூக்ஷும தேகத்தோடே விழுந்து ஆகாயமாய்ப் போய்விடு வான். ஆகாயமாய்ப்போனபிறகுவாயுவாய்விடுவன். வாயுவானபிறகு தேயுவாவன். தேயுவானபிறகு புகையாவன். புகையானபிறகு மேகமாவன். மேக மானபிறகு நீருண்டமேகமாவன். அதன்பிறகு வரு ஷ்சலமாய்ப் பூமியிலேவிழுந்து நெல்லு, உளுந்து, பயறு, எள்ளு முதலாகிய தானிய விசேஷங்கள் ஔஷதிகள், விருக்ஷங்கள், சிறுகொம்பு, புற்பூடு, கொடி, காய், கிழங்கு, கந்தமூலபலாதி அன்னமா ய்ப் போய்விடுவன். இவைகளிலே சம்பந்தமாத்தி ரமேயொழிய இந்தச்சென்மம் அவனுக்கு இல்லை. ஆனால் இந்தச்சென்மம் யாருக்கென்று வினவுண் டாமாயின் பாவிகளாயிருக்கிறபேர்கள் நரகங்களை யனுபவித்து பூலோகத்தின்கண் வந்து பாவசே ஷத்தினாலே ஔஷதிகள், பயிர்கள், மரங்கள், புல்லுப் பூடு, செடிகொடி, நவதானியங்கள், இந்தச்சென் மங்களை யெடுப்பார்கள். அந்தச் சென்மங்களோ டே கூடியதினுண்டாகிய சுகதுக்கங்களை யனுப

விப்பார்கள். சுவர்க்கத்திலே யிருந்து வருகிறபேரி ந்த ஓசதிகள், பயிர்கள், புல்பூண்டு, செடிகொடி, நவதானியம் இவைகள் முதலாகிய அன்னமார்க்க மாக மனுஷதேகத்திலேவந்து மனுஷசென்மத்தை யெடுப்பார்கள். இவைகளிலே சம்பந்தமாத்திரம் அவர்களுக்கு, இந்தச்சென்மங்களும் இல்லை. இதி லே யுண்டாகிய சுகதுக்கங்களும் இல்லை. ஆகாச முதலாகிய ஓசதி, அன்னம், புருஷதேகங்களிலே வருகிறது. இவைகளெல்லாம் புண்ணிய புருஷர் கள் சுவர்க்கத்திலேயிருந்து வருகிற மார்க்கமேயல் லாமல் பாவிகளைப்போலே இந்தச் சென்மங்கள் அவர்களைதொடுக்கிறதில்லை. இதனைவிரிக்கிற்பெருகும் சுருக்கியுரைத்தாம். இன்னும் காணவேண்டில் விரி ந்த நூலிற் கண்டுதெளிகவென்று உரைத்தருள.

சீடன்:— இதுவரையுந் தேவரீர் திருவாய் மல ர்ந்தருளியபடி. பாவபுண்ணியத்தைச் செய்தவர் கள் அதற்குரிய பிரயோசனமாகிய நரகசுவர்க்கத் தை யநுபவித்துத் திரும்பிவரும்விதத்தை இவ்வி டத்தெவர்களுக்கும் நன்கு விளங்கும் வண்ணம் ஒரு திருஷ்டாந்தமூலமாய் அறிவிக்க விரும்புகின் றேனென்றிரங்க.

ஆசிரியர்:— நனவினைவிட்டுச் சொப்பனத்தை மருவுதல்போல் நரகசுவர்க்கத்தை யடைவதாகும். அச்சொப்பன தேகமாகிய சூக்ஷுமதே [illegible]

புடைபெயர்ச்சியாகிய நற்பயன் துறக்கம்போலும், துன்பம் நரகம்போலும், பின் நனவைச் சார்தல் உற்பவம்போலும் என்ன.

சீடன்:—சுவாமிகளே! தேவரீர் திருவாய் மலர்ந்தருளிய வாக்கியத்தை அறிந்து கொண்டனன். அறிந்துகொண்டாலும், இன்னும் கேட்கும் விண்ணப்பமொன்றுளது. அதாவது பிறப்பிறப்புகளிற் படுந்துக்கத்தை அருள்செய்வதோடு இவ்வுலகத்தின் கண் அனுபவிக்கும் சுகத்தினையே மேன்மையென்றும், துறக்கவுலகத்தின் கண் அனுபவிக்கும் சுகத்தினையே இன்பமென்றும் சிலர் சொல்லுகின்றனர்களே அதன் விபரத்தையும் நன்கு விளங்குமாறு அருள்செய்யும்படி பிரார்த்திக்கின்றேனென்ன?

ஆசிரியர்:—அன்பனே! நரகத்தினிடத்தும், சுவர்க்கத்தினிடத்தும், இவ்விடத்தும், பிறப்பு, இருப்பு, இறப்பு என்னும் இம்மூவகையிடத்தும் துன்பமேயன்றி எட்டுணையும் இன்பமில்லை யென்றும், மோக்ஷம் ஒன்றுமே இன்பமென்றும் யான் உன்றனக்கு அருள்செய்யக்கேட்பாயாக. அதாவது உற்பத்தி திதி லயங்களையுடைய கொடியபிறப்பின் கண்ணே துன்பமேயல்லாமல் எள்ளினளவாயினும் மனத்தின் கண் அறிவையூன்றி விசாரணை செய்யுமிடத்துச் சுகமேயில்லை. அங்ஙனம்

சுகமில்லாதிருந்தும் உண்டுபோல மாறுபடுத்தி
உயிர்களுக்கெல்லாம் விளக்கும் விசாரணையை மா
ற்றுகின்ற அஞ்ஞானவிருள் அந்தவிருளும் நீங்கி
அப்பிறப்பு துன்பமென்பது உள்ளமுறைமையே மா
ட்சிமைப்பட்ட மோக்ஷத்தை யடைதற்கு முற்செ
னனங்களிலே தவம்பண்ணின பெரியோர்களது
மனத்தின்கண்ணே தோன்றும் இதுவல்லாமலும்
இந்தவுடலானது மாதாவினது கற்பத்தின்கண்
உற்பவியாநின்ற காலத்தில் ஐந்து பெரியதுன்பங்
கள். அது லயமாகின்றகாலத்தில் அவ்வுற்பத்தித்
துன்பத்துக்கு எட்டுப்பங்கு அதிகம். அவ்வுற்பத்தி
காலத்தும் லயகாலத்துந் துன்பமேயானால் அவற்
றிற் கிடையாயுள்ள திதிகாலத்திலேதான் இன்ப
மில்லையோவெனின் அக்காலத்தும் நரை, திரை,
மூப்பு களினாற்றுன்பம். அம்மூப்பின்றியே வாலப்
பருவத்தின் கண் இல்லையோவெனின் அப்பருவத்
திலும் அறியாமையினாற்றுன்பம். அறிவுதயமாகிய
குமாரப்பருவத்திற்றான் இன்பமில்லையோவெனின்
அப்பருவத்தின் கண்ணும் வாதபித்த சிலேத்மங்க
ளாகியவியாதிகளினாற்றுன்பம். அவ்வியாதியின்றிய
விடத்துந்தான் இன்பமில்லையோவெனின் விட்டு
நீங்காது மாறி மாறிவருகிற பசிவியாதி காமவியாதி
களினாற்றுன்பம். அவ்வியாதிகள் வருந்தோறும்
அருந்தல பொருந்தலாகிய மருந்தினைப் புசித்துத்
தணித்துக் கொண்டாற்றான் இன்பமில்லையோ
வெனின் அம்மருந்தினால் அவ்வியாதியைத் தணி

த்தற்பொருட்டு அதற்கேதுவாகிய மிகுந்ததிரவியந் தேடுதலினாற்றுன்பம். அத்திரயம்வந்து பொருந்திய காலத்துத்தான் இன்பமில்லையோவெனின் அதனை ராசசோராக்கினிகளால் சேதம்வாராதபடி பாதுகாத்தலினாற் றுன்பம் அதனைக்காக்க வல்லமையுடைய ராசாவுக்குத்தான் இன்பமில்லையோவெனின் அவனுக்குமேலாகிய மகாராசாவினால் துன்பமாம். அதுவல்லாமலு முற்பவத்தில் ஐம்பெருந்துயரென்றது கருப்பாசயப்பை உருத்தலினாலும், அதிற் சலம் பூரித்தலினாலும், உதராக்கினி சுடுதலினாலும், பிரசூத வாயுமுரித்துத் தள்ளுதலினாலும், யோனித்துவார நெருக்கத்தினாலும். மலையிருத்திக்கொண்டதுபோலவும், கடலின்கண் வீழ்த்தி மிதித்தல்போலவும், இருப்புக்கடத்தி லடைத்து நெருப்பாற்சுடுதல்போலவும், மலைமேல் நின்றானைத் தலைகீழாகத்தள்ளுதல் போலவும், ஆலையிலிட்டக்கரும்பு நெருக்குண்டல்போலவும், வருந் துன்பங்களையும் லயகாலத்தின் கண் வருந் துன்பங்களையும் கடவுளேயறிய வல்லவனாகையால் உவமை கூறப்படாமையின் அத்துன்பத்தில் எண்மடங்கென்று ஔவை கூறினார். அவற்றிற் கிடையாயுள்ள திதிகாலத்தின் கண் வரும் வாலகுமாரவிருத்தமாகிய மூவகையிடத்தும் அறியாமையினாலும், வியாதிகளினாலும், பசிநோய்களினாலும், அந்நோய் தணித்தற்கு ஏதுவாகத் திரவியந் தேடுதலினாலும், அதனைப் பாதுகாத்தலினாலும், நரை, திரை, மூப்பு

களினும் துன்பங்கள் உளவாகையால் உற்பத்தி திதி லயமென்று கூறிய காலத்திரயங்களினும், துன்பமேயன்றி இன்பமில்லையென்பது கண்டுகொள்க. கருப்பாசயமுதல் யோனித்துவாரமீறாகிய வைந்தும் பஞ்சபூத காரியமாதலின் அவ்வைந்தினும் வருந் துன்பங்களும் பசிவியாதிகள் காமவியாதிகள் மற்றையவியாதிகள் போல் மருந்துண்டால் ஒருங்கே நீங்காது குன்மவியாதிக்கு உவர்மண் ணீர்குடித்தால் அப்போது அடங்கி நின்று மீண்டும் தோன்றும் என்றறிக.

உற்பவத்தைம்பெருந் துயரென்றதற்கு உதாரணம்

சிவதருமோத்தரம்.

என்றென்றெண்ணி யிருக்குமுயி
    ரிடர்ப்பட்டழியு மெழில்வரைக்கீ
ழொன்றுமொருவன் றனைப்போலக்
    கருப்பாசயப்பை யுறுத்துதலின்
மன்றவுததிமறிந் தாழ்வான்
    வருத்தமென்ன வருந்தியிடு
நின்றகருப்பா சயவுதக
    வெள்ளங்கொள்ள நிரையழிந்தே.

அன்றியும்,

அங்கியதனிற் றங்கியிடு
    மயோமயத் தைக்கும்பத்திற்
றங்குமொரு வன்றபனன்போற்
    றபனமெய் துந்தாயுதரத்

தங்கிசடவே யழலனைய
சூசியதனு லாகத்தைப்
பங்கித்திடவே படுபிடரி
னிருநாற்குணி தம்பட்டழுங்கும்

அன்றியும்,

கருப்பாசயமே கட்டமதா
மதனினதிகங் கடுங்காலு
முரிக்கமிகவு மோகமுற
முன்னையுணர்வு மற்றிலையே
மரிக்கவாலை ; கரும்பெனவே
யோனிவழியின் வலிதொலைய
நெருக்கப்பட்டு நிலமிசையே
தோன்றுமுயிரு ளிலையுடனே.

என்றும்,

பவந்துயரின்மரணத்துயரெண்மடங்கு என்றதற்கு உதாரணம்.

குறுந்திரட்டு.

பரணமாகிய பெண்டிருஞ்சுற்றமும்
பண்டுதங் கையிற்றந்த
விரணமானவை கொண்டிடவிவரை
விட்டியம்பிடா திவனேகு
மரணவேதனை யாவராலறியலா
மயங்கியைம்புல னாந்தக்
கரணம்யாவையும் கலங்கிடவருந்துயர்
ர யறிகிற்பான்.

என்றும,

## சிவதருமோத்தரம்.

தனத்தினைமனை தனைத் தானியந்தனை
நினைத்தினியெவரனு பவிப்பர்நீங்குநா
ளெனக்கிவையன்னிய மாகுமேயெனு
மனத்துயர்மலியவே மாயுமாவியே.

என்றும்,

## மெஞ்ஞான விளக்கம்.

வந்திடுமரணத்துன்ப மறித்துரை செய்யப்போமோ
வந்திமேலையும்பித்து முணர்வொடு பொறிகலங்கி
நந்திடாவிருளேமூடி நாவுலர்ந் தலமந்தென்னே
யிந்தமாவிறப்பிற்றுன்பம் பவத்துன்பத் தெண்மடங்கே.

என்றும்,

## தேவாரம்.

புலனைந்தும்பொறிகலங்கி நெறிமயங்கி
யறிவழிந்திட்டைமேலுந்தி
யலமந்தபோதாவி யஞ்சேலென்றருள்புரிவா
னமருங்கோயில்
வலம்வந்துமடவார்க ணடமாடமுழவதிர
மழையென்றஞ்சிச்
சிலமந்தியலமந்து மரமேறிமுகில்பார்க்குந்
திருவையாறே.

என்றும்,

திதிக்கட்டியோம் என்றதற்கு உதாரணம்.

## மெஞ்ஞான விளக்கம்.

நரைமிகாமூப்புத் துன்ப
நடைதளர்ந் துரைகுழத்துச்
சலமதே மிகவுந்தோன் றித்
தண்டுகொண் டூறிச்சித்தக்
கலனமே பிறந்துகண்டார்
கார்ச்சித்தங் குமிழூர்வண்ணம்
மலைவொளாஞ் செய்யுமூப்பின்
வருந்துயரந் தோபாராய்.

என்றும்,

பிணியினால் வலியுங்கேடாம்
பிணியினா லுறுகும்போகுந்
துணிவெலாம் பிணியாற்குன்றுந்
தொலைவில்லை துணையேசெய்யுந்
துணிவிலா துள்ளேநின்று
சாலவுமொறுக்கும் பொல்லாப்
பிணியதே யொக்குந் துன்பம்
பேசிடிற் பிறிதுமுண்டோ.

என்றும்,

இதுவல்லாமலும் அறிவு உதயமாகிய குமாரப் பருவத்தின் கண் வியாதியின்றித் திடகாத்திரனாய்த் தனது ஒருவெண் கொற்றக்குடை நிழற்கண்ணே பெருமை பொருந்திய இராச்சியபாரத்தையெல்லாம் காக்கின்ற செல்வத்தினை யடைந்ததனால் மனுடானந்தத்தினையுடைய மகாராஜாவுக்கு

த்தான் இன்பமில்லையோ வெனின் அவனுக்கும் எந்தக்கணப்போதிலே யமன்வந்து தேகநாசம் பண்ணுவனோவென்னும் பயத்தினாலும் சனங்கள் செய்தபாவம் இராசாவைவந்துசாரும் அப்பாவ மிகுதியால் மறுமைக்கண் நிரயத்துன்பம் வருமென்று மேல்வருங்காரியவிசாரணையினால் வரும்பயத்தினாலும் மிகவும் உள்ளந் திடுக்குத்திடுக்கென்று மாறாது நின்று பறையறையுமானால் அவனொழிந்த மற்றையர் பூமியின்கண் இன்பமுமுளரோ இவர் அற்பச் செல்வத்தினையுடையோரும் மனக்களிப்பு மிகுத்திருப்பாராகலின் மகாசெல்வத்தினையுடைய அந்தராஜாவுக்கு அப்பயங்களும் அவற்றால் வருந் துன்பங்களும் இல்லை மகாபோகங்களை யனுபவித்துக்கொண்டு மனக்களிப்பு மிகுத்திருப்பனென்று நீ சொல்வாயானால் விவேகம் இன்மையால் மேல்வருங்காரிய விசாரணை பண்ணுதமானுடர்க்கு மனக்களிப்பல்லது விவேகமும் விசாரணையு முடையோர்க்குத் துன்பமேயன்றி இன்பம் இன்றென்று அறிவாயாக.

உளமிகப்பறைநின்றறையுமென்றதற்குஉதாரணம்

குறுந்திரட்டு.

பிறந்தவரிறத்தல் பிழையாதெனவறிந்தா
குறுந்துயரொழிந்தினிய வுண்ணினைவாரோ
மறந்துவிடயத்துமய லுற்றிடுதல்வான்மீ
னிறந்தவரையுச்சிவிழுவோ னிடைகொளின்பம்.

என்றும்,

## திருவள்ளுவநாயனார்.

நன்றறிவாரிற்கயவர் திருவுடையர்
நெஞ்சத் தவல மிலர்.

இதுவல்லாமலும் இந்த மானுடர்போல உற்பத்திலயங்களை யுடையோராய் அவற்றுக்கிடையாகிய திதிக்கண்ணும் பலவியாதிகளையும் சத்துருக்களினாற் பயங்களையும் அடங்காத காமக்குரோதாதிகளையும் அடையப்படுதலின் தேவர்களுக்கும் இன்பமென்னையுள ஊர்த்தயோனிகளாகிய தேவகதிமானுட கதிக்கண்வருஞ்சிறப்பு இவைகளானால் குறுக்கியோனிகளாகிய மிருககதியினது துன்பங்களையும் மகாபாவிகள் வீழுதுற்ற நரககதியினதுமிருந்த பெரியதுன்பங்களையும் சொல்வதென்ன ஆகையால் பிறப்பின்கண் துன்பமேயல்லதில்லை.

வானவர்க்குமற்றென்னை யுளசுகம் என்றதற்கு உதாரணம்.

## பெருந்திரட்டு.

தீயவசுரர்பகையுண்டு செற்றவார்வமிகவுண்டு
நோயுண்டனங்களுருண்டு நோய்கட்கெல்லாந்தாயான
காயமுண்டுகைதொழுவேன் நெருமுண்டுகெற்புத்தைத்
மாயுந்தன்மையுண்டானால் வானோர்க்கென்னைவாழுவுண்டே.

என்றும்,

குருடன்புகரா மார்த்தாண்டன்
குட்டரோகியா மென்று
புருடன்றலைநோய் புரந்தரற்குப்
புயத்தில்வாதந் தக்கற்குக்
கரநோயுண்டு சயரோகஞ்
சோமனுக்கு நீரழிவு
வருணற்கிவ்வா றமரர்க்கு
நோயுண்டென்றே மருத்துவரும்.

என்பதனாலறிக,

நாற்கதியுள்ளும் அதிகமாயுள்ள தேவகதிக் கண்ணும் இங்ஙனந் துன்பமேயல்லது வீடு ஒன்றுமே இன்பமென்றருள.

சீடன்:—கருணாகரனே! தேவரீர் போதித்த வாக்கியத்தினால் வீடு ஒன்றுமே இன்பமென்றும் மற்றவை யனைத்துந் துன்பமென்றும் அறிந்து கொண்டனன். அந்த இன்பத்தையடையுமாறு இங்ஙனம் அதனை அடியேனுக்கு அருள்வீராக வென்ன?

ஆசிரியர்:—அன்பனே! முன்சென்மாந்திரங் களில் சிவபுண்ணியஞ் செய்தவர்கள் எவர்களோ அவர்களுக்கு இனிமேற்சொல்லும் வாக்கியம் நன்குபுலப்படும் ஆனதுகொண்டு நீயும் உன்புத்திக்கு புலப்படுமாறு நாம் போதித்த சூக்ஷும பஞ்சாக்ஷரத்தை இன்னும் இடைவிடாது தியானித்துக்கொ

ண்டு வருவதோடு கன்மயாகம், தபோயாகம், செ
பயாகம், தியானயாகம் ஞானயாகம் எனஐவகை
யாகங்களுண்டு அவைகளுள் கன்மயாகமாவது சந்
தியாவந்தனம், கடவுள்பூசை, அக்கினிகாரியம்
முதலியன செய்தல் தபோயாகமாவது சாந்திராய
ணம் கிருச்சிரம் மாசோபவாசம் முதலிய விரதங்
களினாலே சரீரத்தைவாட்டுதல் செபயாகமாவது
மந்திரங்களை விதிப்படி உச்சரித்தல் தியானயாக
மாவது மனசைவேறொரு விடயத்திலும் பொருந்
தாதவண்ணம் நிறுத்தி இருதயமுதலிய தானங்க
ளிலே கடவுளுடைய திருமேனியைத் தியானித்
தல் ஞானயாகமாவது ஞானநூல்களை விதிப்படியே
தான் தான் ஓதலும் மாணாக்கரை ஓதுவித்த
லும் அவைகளின் பொருளைத் தான் கேட்டலும்
மாணாக்கரைக் கேட்பித்தலும், கேட்டபொரு
ளை நாடோறும் மறவாமற் சிந்தித்தலுமாகிய ஐந்தா
மாம் இவ்வைவகையாகங்களும் ஒன்றுக்கொன்று
ஏற்றமுடையன கன்மயாகத்திற் பதின்மடங்கதி
கம், தபோயாகம் தபோயாகத்தின் நூறுமடங்கதி
கம், செபயாகம், செபயாகத்தின் ஆயிரமடங்கதி
கம், தியானயாகம், தியானயாகத்தின் அநந்தமட
ங்கதிகம் ஞானயாகம் இவ்வைந்தினுள்ளும் கரும
யாகமுதலிய முன்னையநான்கு யாகங்களை அநுட்
டித்தவர் கடவுளுடைய உலகத்தை அடைந்து
அங்குள்ள திவ்வியபோகங்களை அநுபவித்து கா
[illegible]ல மீளவும் சனனத்தை அடைவர்

ஞானயாகத்தை அநுட்டித்தவர் பிறந்திறவாப் பெருவாழ்வாகிய சாயுச்சியத்தை அடைவர் ஆதலினால் ஞானயாகத்திற் சிறந்தது பிறிதொன்று மில்லை. அதனைச்செய்யின் இறைவனடியடைவிக்குமென்ன ?

சீடன்:—சுவாமி கன்மவேள்வி முதல் தியான வேள்வி ஈறாகிய நான்கும் போகத்தை யூட்டுவன வென்றும் ஞானவேள்வி ஒன்றுமே வீடுபேற்றைத் தருமென்றும் தேவரீர் அருளியபடி சுருதிப்பிரமாண முண்டோவென்ன ?

ஆசிரியர்:—சிவஞானசித்தியார்.

ஞானநூறனையோத லோதுவித்தனற்
பொருளைக்கேட்பித்தறான் கேட்டனன்றா
யீனமிலாப்பொருளதனைச் சிந்தித்தலைந்து
மிறைவனடியடைவிக்கு மெழின்ஞானபூசை
யூனமிலாக்கன்மங் கடபஞ்செபங்கடியான
மொன்றுக்கொன்றுயருமிவை யூட்டுவதுபோக
மானவையான்மேலான ஞானத்தாலரனை
அருச்சிப்பர்வீடெய்த வறிந்தோரெல்லாம்.

என்றருளி மௌனமுற்றிருந்தனர்.



சிவமயம்.

# தாதபுத்திர சகமார்க்கப்படலம்

அப்பிரமேயபோற்றி யாருயிர்த்துணைவாபோற்றி
யொப்பிலாவொருவபோற்றி யுணர்பவர்க்கனியாபோற்றி
நட்பயலில்லோய்போற்றி நாதநாதாந்தபோற்றிச்
சுப்பிரமணியாபோற்றிச் சுயம்பிரகாசபோற்றி.

அற்புதவமலவேக வசிந்திதவகண்டாகார
நற்சிதம்பரவேகாந்த ஞானநாதாந்தவின்ப
சொற்பிரகாசசுத்த சூனியதுரியாதீத
தற்பரவனந்தானந்த சற்குருநாதபோற்றி.

கண்ணிலாக்குழவிவெய்ய காரிருட்டறைபட்டாங்குத்
திண்ணியமலவறைக்குட் சிக்கியசிறியேன்றன்னை
நண்ணருஞானக்கையா னுன்முகன்முதலோரோங்குந்
தண்ணளியாலெடுத்த சற்குருநாதாபோற்றி.

முந்தரைப்பகைவரென்று மூர்க்கரையுறவரென்றும்
பெத்தனுயனேககாலம் பிறந்திறந்தெய்த்திட்டேற்குப்
பத்தியான்ஞானங்காட்டி ஞானத்தாற்பரனைக்காட்டும்
சத்தியஞானனந்த சற்குருநாதாபோற்றி.

பொச்சையாமுடலங்காட்டிப் பொறிபுலன்கரணங்காட்டி
யிச்சையாருயிருங்காட்டி யெழிற்றிருவருளுங்காட்டி
யச்சமின்னிலையுங்காட்டி யகம்புறந்தானுங்காட்டிச்
சச்சிதானந்தங்காட்டு சற்குருநாதாபோற்றி.

என்று தோத்திரப்பாமாலைசூட்டி,

சீடன்:—எல்லாவல்ல விறைவனே ? ஒருவன் மோட்சத்தை யடையவேண்டின் முறையே அநுட்டிக்கும் கிரமம் யாதோவென்ன ?

ஆசிரியர்:—ஒருவன் மோக்ஷத்தை யடைய வேண்டில் முறையே சரியை, கிரியை, யோகம், முதிர்ச்சியால் இருவினையொப்பு மலபரிபாகம், சத்திநிபாதம், அல்லது கன்மம் பக்தி முதிர்ச்சியால் நித்தியா நித்தியவஸ்து விவேகம் இகமுத்திரார்த்தப்பலபோக விராகம் சமாதி சட்கசம்பத்து முமுக்ஷுத்துவம் எய்தி ஞானாசிரியரை வழிபட்டு அவரது உபதேசவாக்கியத்தால் கேட்டலாதி நிஷ்டைவரையும் அநுஷ்டித்துப் பேரின்பவீட்டை அடைதல் வேண்டும் அதன்விபரம் வருமாறு சரியையாவது சிவபெருமானுடைய திருக்கோயிலின் மாட்டுத் திருவலகிட்டு விளங்கும்படி திருமெழுக்கிட்டு குற்றமற்றபிரகாசம் பொருந்திய திருவிளக்கிட்டு அழகிய நந்தனவனங்கள் வைத்து புஷ்பங்களெடுத்துப் பொலிவாகியமலரால் இண்டைமுதலிய கண்ணிகள் சிவபிரான் திருமேனியிற் பொலிவுறும் வண்ணம் பலவாக அமைத்து முதல்வனுடைய புகழுதற்கரிய கீர்த்தியினை வாயாரவாழ்த்தி சிவனடியார் திருவேடத்தைக் கண்ணுற்றவளவில் அடியேனாற் செய்யத்தக்க குற்றேவல்யாது அதனையருளவேண்டுமென்று வணங்கி அவரருளிச்செய்யும் பணிவிடையுஞ் செய்வாய். இச்சரியையானது எத்த

னையோ சென்மாந்திரங்களில் நிலையுறும் இடைவிடா முயற்சியுடையோன விரைவிற்செய்து முடிப்பன் அதனைமுடித்துக் கிரியைக்குரிய பக்குவனாய் வருஞ்சமயத்தில் கன்மவசத்தால் சரீரம்விடில்சிவசாலோகபதவியினை யடைவன் சரியையிதென்பதற்கு உதாரணம்.

சிவஞான சித்தியார்.

தாதமார்க்கஞ்சாற்றிற் சங்கரன்றன்கோயிற்
றலமலகிட்டிலகு திருமெழுக்குஞ்சாத்திப்
போதுகளுங்கொய்து பூந்தார்மாலைகண்ணி
புனிதற்குப்பலசமைத்துப் புகழ்ந்துபாடித்
தீதிறிருவிளக்கிட்டுத் திருநந்தனமுஞ்
செய்துதிருவேடங் கண்டாலடியேன்செய்வ
தியாதுபணியீரென்று பணிந்தவர்தம்பணியு
மியற்றுவதிச்சரியைசெய்வோ ரீசனுலகிருப்பர்.

என்றறிவாயாக,

கிரியையாவது புதிதாகிய வாசனையுடையமலர்கள் தூபந்தீபம், திருமஞ்சனம், திருவமுது முதலிய பூசோபகரணங்களெல்லாந் தேடியமைத்துக் கொண்டு பஞ்சசுத்திகள்பண்ணி சிவாசனமூர்த்தி மூலங்களாலே முறையே ஆசனமிட்டு மூர்த்தியை யெழுந்தருளச்செய்து மூர்த்திமானாகிய பரஞ்சோதியைப் பாவனைசெய்து ஆவாகித்து நிர்மலமாகிய மெய்யன்பினா லர்ச்சனைசெய்து விருப்பத்தோடு துதித்து வழிபாடுமுற்றி நித்தியாக்கினி காரியமுஞ்

செய்து முடிப்பதாம் இதுவும் எத்தனையோ ஜென்மாந்திரங்களில் நிலையுறும் முன்னைத்தவமுடையோன் விரைவிற்செய்து முடிப்பன் மேல்யோகத்துக்குப் பக்குவனும் சமயத்தில் சன்மவசத்தால் சரீரம்விடில் சிவசாமீபத்தினை யடைவன்.

கிரியையிதென்பதற்கு உதாரணம்.

சிவஞானசித்தியார்.

புத்திரமார்க்கம் புகலிற்புதிய விரைப்போது
புகையொளிமஞ்சனம முதுமுதல் கொண்டைந்து
சுத்திசெய்தாசனமூர்த்தி மூர்த்திமானுஞ்
சோதியையும்பாவித்தா வாகித்துச்சுத்த
பத்தியினலருச்சித்துப் பரவிப்போற்றிப்
பரிவினொடெரியில் வருகாரியமும்பண்ணி
நித்தலுமிக்கிரியையினை யியற்றுவோர்க
ணின்மலன் றனருகிருப்பர் நினையுங்காலே

என்று அருளிச்செய்து.

இனி இச்சரியை கிரியையினை யொன்றாக்கியோகத்தைச் சிவயோகமென்றும், ஞானத்தை சிவஞானமென்றும், நான்குபாதங்களையு மூன்றாக்கிக் கூறுவதுமுண்டு அதன்விபரம் வருமாறு சரியை கிரியையினைச் சிவதன்மமென்பர் அச்சிவதன்மத்தையே மெல்வினையென்றும் வல்வினையென்றும் இரண்டுபாகுபாடாகச் சொல்வர் இதில் மெல்வினையாவது ஸ்ரீ சிவபிரான் திருவாலயத்தின் கண் திருவலகு திருமெழுக்கு, திருவிளக்கு, திருநந்தவனம் திரு

ப்பள்ளித்தாமம் திருமஞ்சனம் திருமாலை யிதுமுத
லாயுள்ள தொழில்களும் திருவேடத்தாரை வழிப
டுகையும் சிவபக்தருக்குவேண்டுவன செய்கையும்
திருமந்திரஞ் செபிக்கையுமாக இப்படியே செய்
யப்பட்ட குற்றமற்ற வழிபாடான சரியையும் இந்
தச்சரியையின் முதிர்ச்சியாலே திருவுள்ளத்தடை
த்து சிவபிரானை யர்ச்சித்து வழிபடுகிற கிரியாவிதி
யும் நல்லசெயற்பாடென்று நமக்கு எளிதாகச்செ
ய்ய லாகையாலே இவ்விரண்டையும் மேல்வினை
யென்று திவ்விய ஆகமங்களிற் சொன்னபடியா
லே நாம் உனக்கு இதனைச்சொன்னோம். இந்நிலை
யில் நின்று வழிபடுகின்ற அளவில் கொலை. களவு,
கள், காமம். பொய் என்கிற ஐந்தையும் விட்டு நிற்
கையாலும் மனவாக்குக் காயங்களால் நினைப்பன,
சொல்வன, செய்வன வெல்லாம் தெய்வ கிருத்தி
யத்தினாலே யாகையாலும் அசுத்தத்திலேநின்றும்
நீங்கிச் சுத்தனாய் நிற்கையாலும் சர்வான்மாக்களை
யும் தன்னைப்போலே காண்கையாலும் வேதாகமங்
களின் முறைமைகளிலே வழுவாமல் நிற்கையா
லும் இந்நிலையுடையானை ஆசாரியனாலே வேதிய
னேயென்று அழைக்கப்படுவன் இம்மெல்வினை
யின் முதிர்ச்சியாலே நம் உயிர்த்துணையாகிய பர
மேஸ்வரனோடு மிருந்த சிநேகமாய் இவனுக்கு
விளைந்த வல்வினையின் முறைமையை அருளிச்செ
ய்வோம் கேட்பாயாக அஃதாவது நல்லவரங்களைத்
தருகின்ற வயிரவ வேடங்கொண் டெழுந்தருளிய

கடவுளுக்குக் கறியமுது செய்யும்பொருட்டு முன்
னேயிரக்கமின்றித் தமது திருக்கரங்களாலே பிள்
ளையைக் கொலைசெய்த சிறுத்தொண்ட நாயனாரது
கொடுவினை போன்றவற்றை நாம் வல்வினையென்று
கூறினோம் அல்லாமலும் பாவம் பழியனை நோக்கா
மல் பிதாவும் பிராமணனுமாகியோனது பாதங்க
ளைச்சேதித்த சண்டேசுர நாயனாரது வல்வினையை
நோக்கிச் சிவபிரான் தாம் ஆம் தன்மையை அரு
ளினார் இதுவும் வல்வினையேயாம் கழனியின் கம
ரிலே சிந்திய செங்நெலரிசி, செங்கீரைமாவடு என்
னும் கட்டளைப்பொருளாகிய இதனைத் திருவமுது
ச்செய்தருள்க என்று மெள்ள இருந்து கண்டத்
தோடு தண்டினையரிந்து அச்சிவபிரானுக்கு நிவே
தித்துப் பிறவி வேறுத்தலாகிய வல்வினைசெய்த
அரிவாட்டாய நாயனாரை இவ்வியல்பினரென நா
ட்டி நாம்புகழ்வது முடியுமோ என அருள்செய்து
இன்னும் அருளுகின்றார். அதாவது சாஸ்திரங்
களிற் சொன்னவழியன்றியே அளவற்ற அன்பின்
பெருமையாலே உலகத்தியற்கையை விட்டு யாவ
ராலுஞ் செய்யவொண்ணாத செயல்களைச்செய்த
மையாலும் இவற்றை ஒரு பிரமாண நூல்களாலுஞ்
சொல்ல அரிதாகையாலும் அவைகள் வல்வினையெ
ன்று சொல்லப்பட்டன இப்படிக்கொடிதான வல்
வினையைச் செய்பவர்களும் முத்தியைப்பெறு
வார்களோவென்னும் வினாவுண்டாமாயின் பரமே
சுவன் மாட்டு அன்புடையார்செய்யும் பாதகமும்

புண்ணியமாகும் அவ்வன்பில்லார்செய்யும் அளவ
ற்ற புண்ணியமும் பாவமேயாகும் என்று. சரியை
யாதி நான்கும் மூன்றிலடங்குமென்பதற்குப் பிர
மாணம்.

### திருக்களிற்றுப்படியார்.

நல்லசிவதன்மத்தா னல்லசிவயோகத்தா
னல்லசிவஞானத்தா னானழிய-வல்லசிவ
வாரேனுமன்புசெயி னங்கே தலைப்படுங்கா
ணூரேனுங் காணவையன்.

சிவதன்மத்தை மெல்வினை வல்வினையென்ற
தற்கு உதாரணம்.

மெல்வினையேயென்ன வியனுலகிலாற்றரிய
வல்வினையேயென்ன வருமிரண்டும்-சொல்லிற்
சிவதன்மமாமவற்றிற் சென்றநிலே செல்வாய்
பவகன்ம நீங்கும்படி.

### மெல்வினையிதென்பதற்கு உதாரணம்.

ஆதிலையர்ச்சித்தற் கங்கமுமங்கங்கே
நீதிதிறம்பலவுஞ் செய்வனவும்-வேதியனே
நல்வினையாமென்றே நமக்குமெளிதானவற்றே
மெல்வினையேயென்றதுநாம் வேறு.

### வல்வினையிதென்பதற்கு உதாரணம்.

வரங்கள்தருஞ்செய்ய வயிரவர்க்குத்தங்கள்
கரங்களினலன்று கறியாக்க-விரங்காதே
கொல்வினையேசெய்யுங் கொடுவினையே யானவற்றை
வல்வினையேயென்றது நாமற்று,

பாதகமென்றும் பழியென்றும் பாராதே
தாதைதனைவெகுண்டதாளிரண்டுஞ் சேதிப்பக்
கண்டீசர்தாமம் பரிசளித்தார்கண்டாயே
சண்டேசர் தன்செயலாற்றான்

செய்யிலுகுத்த திருப்படிமாற்றதனை
யையவிது வமுதுசெய்கென்று வையவிருந்
தட்டியறுத்தவர்க்கே யூட்டியறுத்தவரை
நாட்டியுரைசெய்வதென்னோ நாம்

அன்பில்லார்செய்யும் புண்ணியமும் பாவமா குமென்றதற்கு உதாரணம்.

சிவஞானசித்தியார்.

அரனடிக்கன்பர்செய்யும் பாவமுமறமதாகும்
பரனடிக்கன்பிலாதார் புண்ணியம்பாவமாகும்
வரமுடைத்தக்கன்செய்த மாவேள்வி தீமையாகி
நரரினிற்பாலன்செய்த பாதகநன்மையாய்த்தே

இன்னுஞ் சரியைகிரியைகளினின்று சாதித்த வர்களும் பிற்பட்ட செனனத்தில் இப்படி முதிர்ந்த வல்வினை கூடாமல் முறையே யோகஞானங் களை அநுஷ்டித்து மோக்ஷ இன்பமடைதல் வேண்டும் என்பது வேதாகம சம்மதமாகலின் மேல் யோகத்தை அருள்செய்வோங் கேட்பாயாக அந்த யோகம் எட்டு அங்கமுடையன அது இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதியாம்.

# வேதாகம சோபான முறை.

இதில் இயமம் பத்துவகைப்படும்.

அவை.

௧-வது, அஹிம்சை:—இதர பிராணிகளுக்குத் துக்கத்தை யுண்டுபண்ணாமலிருப்பதாம்.

௨-வது, சத்தியம்:—பொய்சொல்லாமையாம்.

௩-வது, ஆஸ்தேயம்:—அன்னியருடையசொத்தைக் கிரகிக்கமனத்தாலும் நினையாதிருத்தலாம்.

௪-வது, பிரமச்சரியம்:—ருதுகாலமின்றி மற்றைக்காலத்தில் சுயஸ்திரீயையும் விரும்பாதிருத்தலாம்.

௫-வது தயை:—தன்னைப்போல்யாவரும்மோக்ஷத்தையடைய மனதிற்கொள்வதாம்.

௬-வது, ஆர்ஜவமாவது:—பெண்டீர்முதல் சத்துருவரை சமமாகப்பார்த்தலாம்.

௭-வது, க்ஷமை:—சத்துருக்கள் செய்யாநின்ற துக்கங்களை மனதிற் றரியாமலும் கலங்காமலு மிருத்தலாம்.

௮-வது, திருதி:—வேதவிசாரணையினால் சமுசாரத்திலிருந்து விடுபடுதலேசுகமன்றி வேறில்லை யென்றறிதலாம்.

மிதாஹாரம்:—அதிகமுங் கொஞ்ச மமாகப்புசித்தலாம்.

௰-வது, சவுசம்:—காயத்தை மண்ணினாலும் நீரினாலும் கழுவுதலாம்.

இதற்கு உதாரணம்.

திருமந்திரம்.

கொல்லான்பொய்கூறான் களவிலானெண்குண
னல்லானடக்க முடையானடுச்செய்ய
வல்லான்பகுந்துண்பான் மாசிலான்கட்காம
மில்லானியமத்திடையி னின்றானே.

இனி நியமம் பத்துவகைப்படும்.

அவை.

௧-வது, தபசு:—உபாசனத்தால் தேகத்தை சுஷ்கப்பண்ணுதலாம்.

௨-வது, சந்தோஷம்:—புசிப்பினிடத்திலே போதுமென்று திருப்தியடைதலாம்.

௩-வது, ஆஸ்திக்கியம்:—சுருதி ஸ்மிருதி வாக்கியார்த்தத்தில் விசுவாசம் வைத்தலாம்.

௪-வது, தானம்:—நீதியிற் சம்பாதிக்கின்றதனது பொருளை சிவனடியார்களுக்குக் கொடுப்பதாம்.

௫-வது, ஈசுரபூசை:—பரமேசுரனைத் திரிகரண சுத்தியோடு பூசித்தலாம்.

௬-வது, சித்தாந்த சிரவணம்:—வேதாகமசித்தாந்தப்பொருள்களை குருமுகத்தில் நிச்சயித்தலாம்.

௭-வது, லஜ்ஜை:—லௌகீகத்திலாவது வைதிகத்திலாவது பொல்லாங்கான காரியத்தில் வெட்கமடைதலாம்.

௮-வது மதி:—வேதசாத்திரத்திற்கூறியபுண்ணியப் பொருள்களை விசாரித்தலாம்.

௯-வது, செபம்:—வேதஞ்சொன்னபடி மந்திரங்களை யுருவேற்றுதலாம்.

௰-வது, விரதம்:—அன்னியரையடித்தல்அன்னிய ஸ்திரீயைப்பிடித்தல், அன்னியர்சொத்தைப் பலாத்காரமாகக் கவர்தல் ஆகிய இம்மூன்றுஞ் செய்யாதிருத்தலும் வாக்கினால் கடுமையாகப்பேசுதல் பொய்சொல்லுதல், கோட்சொல்லுதல், உளறல் ஆகிய இந்நான்கை அற்றிருத்தலும் மனது அபீஷ்டவர்க்கத்தை யற்றிருத்தலும் இம்மூவதும் விருதி ஆசரிதம்பண்ணுதலுமாம்.

இதற்கு உதாரணம் திருமந்திரம்.

தபஞ்செபஞ்சந்தோட மாத்திகந்தானஞ்
சிவன்றன் விரதமே சித்தாந்தக்கேள்வி
மகஞ்சிவபூசை யொண்மதிசொல்லீரைந்து
நியமபலசெய்யினிய மத்தனுமே,

ஆசனம் ஒன்பது வகைப்படும்.

அவை.

௧-வது, ஸ்வஸ்திகமாவது:—துடைக்கும் முழங்காலுக்கும் நடுவே இரண்டுள்ளங்கால்களையுஞ் செலுத்தி இருமாந்திருத்தலாம்.

௨-வது, கோமுகம்:—சகனபக்கத்தில் இரு காற் பரட்டையு மாறவைத்து அவ்விருகாற் பெரு விரலைக் கையாற்பிடித்திருத்தலாம்.

௩-வது, பத்மம்:—இருதுடையின்மேலும் இ ரண்டுள்ளங்காலையும் மாறித்தோன்றவைத்தலாம்.

௪-வது, வீரம்:—வலது துடையில் இடது காற்பரட்டைச்சேர்த்து இருமாப்புற்றிருத்தலாம்.

௫-வது, கேசரி:—பீசத்தின் கீழ் சீவனியிடத்து பரட்டைவைத்து அங்குலியை விரித்து நாசியைப்பார்த்திருத்தலாம்.

௬-வது, பத்திரம்:—பீசத்தின் கீழ் சீவனியி டத்து இருகாற்பரட்டையும் வைத்து அவ்விருபா தத்தையும் இருகையாலிறுகப்பிடித்து அசையா திருத்தலாம்.

௭-வது, மயூரம்:—முழங்கையிரண்டும் உந்தி ப்புறத்திலழுந்த புவியிற்கையூன்றி கால்நீட்டித் தலைநிமிர்ந்திருத்தலாம்.

௮-வது, முத்தம்:—இடதுகாற்பரட்டால்சீவ னியை யழுத்தி வலது காற்பரட்டில் மேல் உந்த விருத்தலாம்.

௯-வது, சுகம்:—சுகமும் திடமும் எவ்வாறிரு க்க வெய்துமோ அவ்வாறிருத்தலாம்.

இதற்கு உதாரணம்.

திருமந்திரம்.

ஓரிணைப்பதமூருவின் மேலேறிட்
டாரவலித்ததன் மேல்வைத்தழகுறச்
சீர்திகழ்கைகள் தனைத்தன்மேல்வைக்கப்
பார்திகழ்பத்மா சனமெனலாகுமே.

மேல் பிராணயாமம் செய்யத்தொடங்குவோர்,மானத விரதஞ்செய்யவேண்டும். அதாவது அதிபக்ஷணமும் குறைந்தபக்ஷணமுஞ் செய்யாது சமமாய்ப் புசித்துவருவதோடு நித்திரை அதிகமும் குறைவும் இல்லாது சமமாய்ப் பிரபஞ்ச திரிசிய விச்சையில்லாமல் ஏகாக்கிரக சித்தனை முத்தியை விரும்பி நம்முயிர்த்துணையாகிய ஸ்ரீ பரமேஸ்வரனை ஆடிப்பாடி அழுதுதொழுது அன்பு என்புருகிக் கூக்குரலிட்டு அம்மையே அப்பாவென்று தன்னிடத்திலுண்டாகிய குறைகளை விண்ணப்பித்து தனக்குபதேசித்த குருநாதனை வழிபட்டு அவர் ஏவலின்படி நின்று வருதல்வேண்டும் என்ன ?

சீடன்:—சுவாமி! தேவரீர் இந்த இடத்தில் இவ்வளவு வற்புறுத்திச் சொல்லியதற்குக்காரணம் என்னோவென்றிரங்க.

ஆசிரியர்:—அன்பனேகேள் ! மருட்போதத்தைப் பின்னிட்டு அவனருளாலே அவன்றாள் வணங்கி என்றருளிய ஆன்றோர்வாக்கியப்படி அருட்போதத்தை முன்னிட்டு சாதனாதிரங்களைச் செ

ய்யத் தொடங்கின் அச்சாதனம் யாதொரு இடையூறின்றி நிறைவேறும் என்பதை உன்னனுபவத்தில் கண்டுதெளியக்கடவை இம்முறையன்றி வீணை முயற்சியினல் ஓர்காரியமும்நிறைவேரு என்பது வேதாகமசம்மதமாம்.

இனிப் பிராணுயாமம் சகர்ப்பம் அகர்ப்பம் என இருவகைப்படும்.

இதில் சகர்ப்பமாவது தியானத்துடன் மூச்சைப்பிடித்திருப்பதாம்.

அகர்ப்பமாவது தியானமில்லாமல் மூச்சைப் பிடித்திருப்பதாம்.

இந்த இருவகையும் ரேசகபூரககும்பக மென்றுரைக்கப்படும்.

ரேசகம் மூச்சைவிடுதல் பூரகம் மூச்சையேற்றுதல் கும்பகம் மூச்சை நிறுத்துதல் என்றுரைக்கப்படும், இன்னும் இவ்விஷயத்தினைக் குருமுகத்தில் இன்னவின்னகாலத்தில் இன்னவின்னபடி செய்தல்வேண்டும் என்பதைப்பற்றித் தெரிந்துகொள்ளில ஸ்ரீபரமேஸ்வரன் திருவருள்பெறலாம்.

இதற்கு உதாரணம்.

திருமந்திரம்.

மேல்கீழ்நடுப்பக்க மிக்குறப்பூரித்துப்
பாலாமிரேசகத் தாலுட்பதிவித்து
மாலாகியுந்தியுட் கும்பித்துவாங்கவே
யாலாலமுண்டா னருட்பெறலாமே.

பிரத்தியாகாரம் மனதை இந்திரியவிஷயங்களிற் செல்லவொட்டாமல் தடுத்தல், தாரணை, கழுத்து, இதையம், புருவமத்தி, பிரமரந்திரம், நாபி இது முதலாகிய லட்சியம் ஒன்றில் இடையறாது மனதைவைத்தல் தியானம் மற்றவிஷயங்களைத் தியானம்பண்ணாது லட்சியப்பொருளில் தயிலதாரைபோல இடையறாது, சித்தம் நிற்றல். பிரத்தியாகாரம் தாரணை தியானம் இவற்றிற்கு உதாரணம்.

ஈசுரகீதை.

இந்தியமீட்சிதானே யிசைந்திடும்பிரத்தியாகாரங்
கந்தரமிதையநெற்றி கபாலநாபிகளிலொன்றிற்
சந்ததஞ்சிந்தைவைக்கத் தாரணைதரித்துதேக
சித்தனையொழுங்கொன்றேடே சேர்த்ததுதியானமாமே.

சமாதி, யாதோர்விகற்பமின்றி பரமாகாசவெளி தெரிசனமாய் சித்தம் அசைவற்று நிற்றலாம்.

இதற்கு உதாரணம்.

ஈசுரகீதை.

ஓதுமாலம்பன மொன்றுமின்றியே
போதமும்போதகப் பொருளுமொன்றுணர்
பேதமதன்றியே யிருந்தபெற்றிதற்
சாதனமாகிய சமாதியென்பரால்.

இன்னும் இவ்யோகம்.

உச்சுவாச நிச்சுவாச மிரண்டையும் சுழிமுனை மார்க்கத்திலே பிராணவாயுவைச் சலனமறநிறுத்தி விஷயங்களின்வழிமனதைச்செல்லவொட்டாது. முக்கோண சதுரமுதலிய ஆறாதாரங்களின் அந்த

ர்மா திருக்காகிர்மத்தை உணர்ந்து அவ்வாறு தாரங்களின் அதிபதேவதைகளைத் தியானித்து அவ்வாறுதாரங்களிலும் அசபாசத்தி சிவான்மிகையாய் நிற்கும்முறையை நோக்கி மூலாதாரந்தொடங்கி விநாயகர் முதலாகிய தேவதைகளைப் பொருந்தி மேலாகிய பிரமாந்திரமளவும் அசபையுடன் சென்றணைந்து அப்பிரமாந்திரமாகிய தாமரைமுகையை அலர்வித்து அதன் கேசராக்ரத்துள்ள சந்திரமண்டலத்தை மூலாக்கினியினால் இளகப் பண்ணி அவ்வழித்தாயொழுகும் அமிர்தத்தைத் தேகமுழுவதும் நிரப்பிப் பூரணபிரகாசத்தைத் தியானித்தல் முதலியவாம் வினைகள் கெடுதற்குரியவழியாகிய இயமம் நியமமுதலிய இவ்வஷ்டாங்கயோகம் என்னும் அகத்தொழில் மாத்திரையானே அருவத்திருமேனியை நோக்கிவழிபடுதல் யோகமெனப்படும். இது எத்தனையோகோடி. சென்மாந்திரங்களில் நிலையுறும்.

தவமுந்தவமுடையார்க் கென்றபடி.
முன்னைத்தவமுடையான் விறைவிற்செய்துமுடிப்பன்

### யோகம் ஈதென்பதற்கு உதாரணம்.

### சிவஞானசித்தியார்.

யோகமார்க்கம்புலனொடுக்கித் தடுத்துவளியிரண்டுஞ்
சலிப்பற்றுமுச்சதுர முதலாதாரங்க
ளகமார்க்கமறிந்தவற்றி னரும்பொருள்களுணர்ந்தங்
கணைந்துபோய்மேலேறி யலர்மதிமண்டலத்தின்

முகமார்க்க வமுதுடல முட்டத் தேக்கி
முழுச்சோதி நினைந்திருந்தன் முதலாக வினைக
ளகமார்க்க மட்டாங்க யோகமுற்று
முழுத்தழுந்தவர் சிவன்ற னுருவத்தைப்பெறுவர்.

என்றருளி,

இவ்வணம் ஆகமத்திற் கூறிய சரியைகிரியை யோகத்தினை வேதத்தில் கன்மம் பத்தியென்பர் இந்தயோக முதிர்ச்சியுடையார்க்கு அஷ்டமாசித்திகள் கைவசமாம்.

அவை.

௧-வது, அணிமா:---மிகவுஞ்சிறிய உயிர்கள் தோறும் தான்மிகவும் நுண்ணிய அணுவளவாய்ச் சென்றிருத்தல்.

௨-வது, மகிமா:---மிகவும் உயர்ந்த மகாமேரு போல ஆகவேண்டுமென ஆதலாம்.

௩-வது, இலகிமா:---மேருமலைபோல் கனமாக விருப்பினும் பரமாணுக்கள்போல எடுத்தற்கெளிதாயிருப்பது.

௪-வது, கரிமா:---பரமாணுக்கள்போன்ற வடிவுடையதாயினும் மேருவைப்போல எடுத்தற்கரியதாயிருப்பது.

௫-வது, பிராத்தி:---பாதாளத்திலிருந்து பிரமலோகம்போய்ச் சஞ்சரித்து மீண்டும் பாதாளத்துக்கு வரத்தக்கது.

௬-வது, பிரகாமியம்:—பரகாயப் பிரவேசஞ் செய்தலும் விண்ணுலகத்திற் சஞ்சரித்தலும் விரும்பிய போகமனைத்தையும் நினைத்தபடிக்கெல்லாம் இருக்குமிடத்திலேவருவித்து அநுபவித்தல் முதலியனவாம்.

௭-வது, ஈசத்துவம்:—சிருஷ்டியாதிமுத்தொழில்களை நடாத்தியும் சூரியன் முதலாகிய கிரகங்களைத்தன்னேவற்படி நடக்கச்செய்யவும் வல்லது.

௮-வது வசித்துவம்:—அசுரர், பக்ஷி, மிருகம், பூதம், மனிதர், இந்திரன், முதலிய அஷ்டதிக்குப் பாலகர் இவர்களெல்லாரையும் தன் வசமாக்கிக் கொள்ள வல்லது.

இதற்கு உதாரணம்.

திருவிளையாடல்.

அறவுஞ்சிறிய வுயிர்தொறுந்தான்
பரமகாட்டை யணுவாய்ச்சென்
றுறையுஞ்சிறுமை யணிமாவா
மூவரிஞால முதன்மேலென்
றறையுஞ்சிவாந்த மாறூறு
முள்ளும்புறனு மகலாதே
நிறையும்பெருமை தனையன்றே
மகிமாவென்று நிரம்பியநூல்.

இலகுமேருபாரம்போலிருக்கும் யோகிதனையெடுத்தா
லிலகுவானதூலமென விருப்பதிலகிமாவாகு

யிலகுவானபரவணுப்போ லிருக்கும்யோகிதனையெடுத்தா
லிலகுமேருபாரமென விருப்பதன்றோ கரிமாவாம்

பிலத்திலிருந்தோனயனுலகிற்புகுதன்மீண்டும்பிலமடைதல்
பலத்தின்மிருந்தபிரத்தியதாம் பாகாயத்தினண்ணுதல்வான்
புலத்தினியங்கவிச்சித்த போகமனைத்துந் தானிருக்குந்
தலத்தினினைந்தபடிவருதல் பிராகாமியமாந் தவக்கொடியீர்.

விண்ணிவிரவிதன்னுடம்பின் வெயிலாலனைத்தும் விளங்குதல் போல், மண்ணிலுளவாம்பொருள்பலவுங் காலமூன்றும் வானத்தின், கண்ணிலுளவாம் பொருளுந்தன் காயயத்தொளியாலிருந்தறித, லெண்ணிலிதுவு மறையொருசார் பிராகாமியமென்றியம்புமால்.

ஈசனென்னமுத்தொழிலுந்தன் னிச்சைவழிசெய்தொழுபரவித்
தேசன்முதற்கோள்பணிகேட்பத் திகழ்வதீசத்துவமாகும்
பூசலயனார்புள்விலங்கு பூதமனிதர் முதலுலகும்
வாசவாதியென்மருந்தன் வசமாக்கொள்கைவசித்துவமாம்.

சீடன்:—பரமகுருவே! ஞானிகள் இவ்வெண் வகை சித்திகளையும் விரும்புவர்களோ வென்ன?

ஆசிரியர்:—அதனை விரும்பாரெனினும் நிழற்போற் பின்சென்று உலகற்கு அவர்கள் பெருமைதனைவிளக்கும்.

இதற்குப்பிரமாணம்.

திருவாசகம்.

எண்ணிலியாகிய சித்திகள்வந்தெனை
யெய்துவதாகாதே
என்னையுடைப் பெருமானருளீச
னெழுந்தருளப்பெறிலே.

## திருவிளையாடற்புராணம்.

எம்மையுணர்ந்த யோகியர்களிவற்றை விரும்பாரெனினுமவர், தம்மைநிழல்போலடைந்துலகர்க்கனை யார்பெருமைதனையுணர்த்தும், செம்மையுடைய விளைவென்னச் சித்தியெட்டுந் தெளிவெய்தக், கொம்மைமுலையா ரறுவருக்குங் கொளுத்தினனென் குணச்செல்வன்.

## சிவஞானசித்தியார்.

குறித்தடியினின் றட்டகுண மெட்டுச்சித்தி
கோகனதன் முதல்வாழ்வு குலவுபதமெல்லாம்
வெறுத்துநெறியறுவகையு மேலொடுகீழடங்க
வெறும்பொயெனநினைந்திருக்க மேலொடுகீழில்லா
னிறுத்துவதோர்குணமில்லான் றன்னையொருவர்க்கு
நினைப்பரியானென்றுமிலா னேர்படவந்துள்ளே
பொறுப்பரியபேரன்பை யருளியதன்வழியே
புகுந்திடுவனெங்குமிலாப் போகத்தைப்புரிந்தே.

## தேவிகாலோத்தரம்.

அட்டமாசித்தி முதலனைத்துள்ளபேறுகளும்
கட்டமாங்கதி கடரும்பரகதிகாணக்கொடா
மட்டிலாமாலையாய் வியாபகமாயறிவாகிக்
கிட்டலாகாமுத்தி மற்றிவற்றாற்கிடையாதே.

சீடன்:—சுவாமி இதுவரையுந் தேவரீர் அருளிச்செய்த யாவையும் அறிந்தனன். அறிந்தாலும் இன்னுங்கேட்கும் விண்ணப்பமொன்றுளது அதாவது மோக்ஷம் அடையவேண்டுமென்ற எண்ணமுடையவர்கள் முறையே சரியைகிரியை யோகஞ்

செய்தே முடிக்கவேண்டுமோ நேரே ஞானத்தை யடையமுடியாவோ இவ்வளவு பிரயாசம் ஏன்பட வேண்டும் என்றிரங்க.

ஆசிரியர்:—சீடனைப்பார்த்துச்சிரித்து நீ இப்போது சொல்லிய வாக்கியமானது எதுபோலிருக்கிறதென்றால் நாலாவது மெத்தைவீடுகட்டி அவ்வீட்டின்மேலிருந்து இவ்வுலகபோகத்தை யனுபவிக்கவேண்டுமென்ற எண்ணமுடையா னொருவன் கீழ்ஸ்திபாரமாகிய முதல்வீடு இரண்டாம்வீடு மூன்றும்வீடு கட்டாமலே நான்காவதுமெத்தைகட்டி இவ்வுலகபோகத்தை யனுபவித்து விடலாமென்றெண்ணும் அறிவீனத்தைப் போலாகும் இதுவல்லாமலும் ஒவ்வொரு திவ்வியமாகிய கனிவர்க்கங்களைச் சாப்பிடவேண்டுமென்ற எண்ணமுடையா னொருவன் அததற்குரிய வித்துக்களை அததற்குரிய நிலங்களில், அததற்குரிய காலங்களில் விதைத்து அதுபயிராய், அரும்பாய், மலராய், காயாய், கனியாய்ப் பலன்கொடுக்கும்வரைக்கும் அததற்குரிய முயற்சிகளை முயன்றாலன்றோ அதின்பிரயோசனமாகிய கனிவர்க்காதிகளைத்தன் எண்ணப்படியருந்திச் சந்தோஷத்தை யடையலாம் அப்படியல்லாமல் கனியருந்துவதற்கு இவ்வளவு வருத்தம் ஏன் படவேண்டும் அதுவெல்லாம் வீண் முயற்சியென்று எண்ணக்கூடிய அறிவீனத்தைப்போலாம்.

இதற்குப்பிரமாணம்.

தாயுமான சுவாமிகள்.

விரும்புஞ்சரியைமுதல் மெஞ்ஞானநான்கும்
அரும்புமலர்காய்கனிபோ லன்றோபராபரமே.

அன்றியும்,

சரியைகிரியாயோக சாதனம்விடுத்ததெல்லாஞ்
சன்மார்க்கமல்ல

என்றருளினரென்ன,

சீடன்:—சுவாமி! தேவரீர் உபதேசித்தவாக்கியத்தால் சரியைகிரியையோக முதிர்ச்சியினால் அதற்குமேலான நாலாவது நிலையாகிய தத்துவ ஞானஞ் சித்திக்கவேண்டுமென்று அறிந்துகொண்டனன். அறிந்துகொண்டாலும் இன்னும் ஓர் சந்தேகமுளது அதாவது சரியை கிரியையோக முற்றுதலே ஞானமென்று நினைக்கின்றேன் என்ன? அதற்கு அவர் சரியைகிரியையோக முதிர்ச்சியே ஞானமென்பையாயின் சரியைகிரியை முதிர்ச்சியே யோகமென்போம் அஃதில்லையாயின் இஃதுமில்லையென்போம் என்றனர். அதற்கு அவன் சரியைகிரியையோக முதிர்ச்சியே ஞானமென்று சிலர் சொல்லுவதென்னோ வென்ன? அவர் சரியையாதி நான்கில் ஒவ்வொன்றுக்கு நான்கு உண்டென்க.

அவை.

சரியையில்சரியைகிரியை யோகம்ஞானம்
கிரியையில்சரியைகிரியை யோகம்ஞானம்
யோகத்தில்சரியைகிரியை யோகம்ஞானம்
ஞானத்தில்சரியைகிரியை யோகம்ஞானம்.

அவற்றுள் சரியையில் சரியை திருக்கோயில் அலகிடல் மெழுகல் முதலியன, சரியையிற்கிரியை ஐயைந்து மூர்த்திகள் விநாயகக்கடவுள் முதலிய ஆவரண மூர்த்திகளில் ஒருமூர்த்தியை வழிபடுதல் சரியையில் யோகம் நெஞ்சின்கண் உருத்திரக்கடவுளைத் தியானஞ்செய்தல் சரியையில் ஞானம் அத்தியான பாவனையின் உறைப்பினால் ஓரனுபவவுணர்வு நிகழ்தல், கிரியையில் சரியை சிவபூசைக்கு வேண்டப்படும் உபகரணங்களெல்லாம் செய்து கோடல் கிரியையில், கிரியை சிவாகமத்தில் விதித்தவாறே ஐவகைச்சுத்தி முன்னாக சிவலிங்க வடிவிற் செய்யும் பூசனை, கிரியையில் யோகம் அகத்தே பூசை, ஓமம், தியானம், மூன்றுக்கும் மூவிடம் வகுத்துக்கொண்டு செய்யப்படும் அந்தர்யாகம், கிரியையில் ஞானம், அவ்வந்தர்யாக உறைப்பின்கண் நிகழும் ஓரனுபவ வுணர்வு, யோகத்தில் சரியை இயமம் நியமம் ஆதனம் பிராணாயாமம் என்னும் நான்கும், யோகத்தில் கிரியை பிரத்தியாகாரமும், தாரணையும், யோகத்தில் யோகம், தியானம், யோகத்தில் ஞானம், சவிகற்பசமாதி இதனையே யோகமுற்றுதல் ஞானமென்பர், ஞானத்தில்

சரியை, கேட்டல், ஞானத்தில் கிரியை, சிந்தித்தல், ஞானத்தில் யோகம், தெளிதல், ஞானத்தில் ஞானம் நிஷ்டை, இச்சரியையாதி நாநான்கும் திராவிடமா பாடியத்திற் கண்டதேயா மென்றருள.

சீடன்:—சரியையாதி மூன்றும் எது சித்தித்தற்பொருட்டுச் செய்யவேண்டும், ஞானசாதனம் எதுசித்தித்தற்பொருட்டுச்செய்யவேண்டுமென்ன;

ஆசிரியர்:—சரியையாதி மூன்றும் ஞானம் சித்தித்தற் கேதுவென்றும் ஞானம் ஒன்றுமே முத்திசித்தித்தற் கேதுவென்றும் அருள.

சீடன்:—இதற்குப் பிரமாணம் உளவோ.

ஆசிரியர்:—கீழ்வருமாறு காண்க.

பிரபுலிங்கலீலை.

உரைசெயிற் பரமஞான
மொன்றுமே முத்திக்கேது
சரிதைநற் கிரியையோகந்
தாமொருமூன்று ஞான
மருவுதற் கேதுவென்று
மறைபுகன் றுரைக்குமிந்தக்
கருவினைப் பொருளென்றெண்ணிக்
களிப்பவர் கயவரன்றே.

சீடன்:—சரியையாதி மூன்றினாலும் மோட்சமில்லை ஞானத்தினாலேயே மோட்சமுண்டென்பதற்குப் பிரமாணம் உளவோ,

ஆசிரியர்:—கீழ்வருவனவே.

தாயுமானவர்.

பத்திநெறிநிலைநின்று நவகண்டபூமிப்
பரப்பைவலமாகவந்தும்
பரவையிடைமூழ்கியும் நதிகளிடைமூழ்கியும்
பசிதாகமின்றியெழுகா
மத்தியிடைநின்றுமுதிர் சருகுபுனல்வாய்வினை
வன்பசிதனைக்கடந்து
மௌனத்திருந்துமுயர்மலைமுழைவு புக்கியு
மனனுதக நாடி முற்றுஞ்
சுத்திசெய்தும்மூலப் பிராணனோடங்கியைச்
சோமவட்டத் தடைந்துந்
சொல்லரியவமுதுண்டும் மற்பவுடல்கற்பகங்
டோறுமிலை நிற்கவீறு
சித்திசெய்துந்ஞானமலது கதிகூடுமோ
சித்தாந்த முத்திமுதலே
சிரகிரிவிளங்கவருதக்ஷிணாமூர்த்தியே
சின்மயானந்தகுருவே.

அன்றியும்.

மத்தமதகரிமுகிற் குலமென்னவின்றிலகு
வாயிலுடன் மதியகடுதோய்
மாடகூடச்சிகர மொய்த்தசந்திரகாந்த
மணிமேடையுச்சிமீது
"முத்தமிழ்முழக்கமுடன் முத்தநகையார்களொடு
முத்துமுத்தாய்க்குலாவி

மோகத்திருந்துமென் யோகத்தினிலைநின்று
    மூர்ச்சைப்பிடித்தடைத்து.
கைத்தலைநகப்படை விரித்தபுலிசிங்கமொடு
    கரடிநுழை நுழைவுகொண்ட
கானமலையுச்சியிற் குகையூடிருந்துமென்
    கரதலாமலகமென்னச்
சத்தமறமோனநிலை பெற்றவர்களுய்வர்காண்
    சனகாதி முனிவிதன்றோ
சர்வபரிபூரண அகண்டதத்துவமான
    சச்சிதானந்த சிவமே.

என்றும்,

## அகப்பேய்ச்சித்தர்பாடல்.

எத்தனைகாலமுந்தான் அகப்பேய்
    யோகமிருந்தாலென்
முத்தனுமாவாயோ அகப்பேய்
    மோட்சமுமுண்டாமோ.

## சிவஞானசித்தியார்.

நாடுகளிற்புக்குழன்றுங் காடுகளிற்சரித்தும்
நரகமுழைபுக்கிருந்துந் தாகமுதறவிர்ந்தும்
நீடுபலகாலங் கணித்தபாயிருக்கும்
நின்மலஞானத்தையில்லார் நிகழ்ந்திடுவர்பிறப்பில்

என்றும்,

## திருப்புகழ்.

அடைபடாதுநாடோறும் இடைபடாதுபோம்வா
அடையமீளில்வீடாகு மெனநாடி [யு
அருள்பெறுவனுசார கருமயோகியாகாமல்
அவனிமீதிலேசயாது தமோறும்
உடலம்வேறுயான்வேறு கரணம்வேறுவேறாக
உதரிவாசகாதீத அடிநூடே
உருகிஆரியாசார பரமயோகியாமாறன்
உபயபாதநாசீக மருள்வாயே
வடபராரைமாமேரு கிரியெடாகடாமோது
மகரவாரியோரேழு மழுதாக
மருடவாளராகோவ மதியகோவவாரீச
வனிதைமேவுதோராயிரமும்கோலக்
கடையுமாதிகோபாலன் மருகருலிகாபாலி
புதல்வாகானவில்வேடர் கொடிகோவே
கனகலோகபூபால சகலலோகஆதார
கருணைமேருவேதேவர் பெருமாளே.

அன்றியும்,

அனித்தமானஊனுளும் இருப்பதாகவேயாசி
யடைத்துவாயுவோடாத வகைசாதித்
தவத்திலேகுவால்மூலி புசித்துவாடியாச
வசட்டுயோகியாகாமல் மலமாயை
செனித்தகாரியோபாதி யொழித்துஞானஆசார
சிரத்தையாகியான்வேறே னுடல்வேறு
செகத்தியாவும்வேறாக நிகழ்ச்சியாமனோதீத

சிவச்சொரூபமாயோகி யெனவாள்வாய்
தொனித்தநாதவேயூது சுகஸ்திரநாமகோபால
சுதற்கு நேசமாருத மருகோனே
சுவர்க்கலோகமீகாம சமஸ்தலோகபூபால
தொடுத்தநீபவேல்வீர வயலூரா
மனித்தராதிசோணாடு தழைக்கமேவுகாவேரி
மகப்பிரவாகபானீய மலைமோதும்
மணத்தசோலைசூழ்காவையனைத்துலோகமாள்வாரு
மதித்தசாமியேதேவர் பெருமாளே.

சீடன்:—சுவாமி! யோகாப்பியாசஞ்செய்து அது முற்றுப்பெறுவதற்குள் அவர் கன்மவசத்தால் மரித்துவிட்டாரெனின் அவரடையுங்கதியென்னோ வென்ன ?

ஆசிரியர்:—யோகஞ்செய்து அது முற்றுப் பெறுவதற்குள், இடையே கன்மவசத்தால் மறித்துவிட்டால் புண்ணியஞ் செய்தவர்களுடைய உலகங்களை யடைந்து வெகுகாலஞ் சுகமாக இருந்து பின் சுதாசாரமுள்ள ஐசுவரியவான் வீட்டிலேபிறக்கின்றான் அல்லது ஞானிகளான யோகாப்பியாசஞ் செய்கிறவர்களுடைய குலத்திலே செனித்து முன்விட்டகுறையை முடிப்பன் அஃதல்லாமலும் பிரபஞ்ச மயக்கத்தால் தான் மயங்கி னின்றாலும் தவமுந் தவமுடையார்க்காகுமென்றபடி அவ்யோகம் தானே தலைப்படும் இந்தலோகத்தில் இப்படிப்

பட்ட பிறவியானது எதுவோ அதுமிகவுந் துல்லபமானது என்றருள.

சீடன்:—இதற்குப் பிரமாணமுளவோ.

ஆசிரியர்:—கீழ்வருவனவே.

பகவத்கீதை.

யோகமுடியா திடையேயிறந்தவன்
யாகவினைபல செய்தாங்கிசைந்திடு
சோகமின்றெய்தத் துன்பர்தொடாதே
போகநுகர்ந்துபல் காலங்கள்போயபின்.

சிறந்தவாசர் திருக்குலத்தாதல்
அறந்தரும்யோகிக டங்குலத்தாதல்
பிறந்துபெறுவதே லாமெய்திப்பின்னும்
மறந்தவியோக மகிழ்வுடனெய்தும்.

கொண்டபெயரிலுங் குணமிலனாயினும்
உண்டொருவிலென் றுணர்ந்தவியோகந்தான்
பண்டுபெய்யின்ற பயிர்ச்சியிறுதிக்களைந்
தண்டுநவின்றிமுன் றுணேதலைப்படும்.

சீடன்:—பரமபிதாவே கொஞ்சம் சாஸ்திரம் வாசித்தமட்டில் சிலர் சித்தர்கள்வாக்கியம் மயக்கநூலென்றும் அந்நூலிற் சொல்லிய விஷயம் யோகமேயொழியஞானமில்லையென்றும் அவர்கள் யோகபயிற்சியினால்தான் சித்துவிளையாடிக்கொண்டிருக்கிறார்களென்றும் அவர்களுக்கு ஞானானுபவமில்லையென்றும் சொல்லுவதை உண்மையென்றே நினைக்கிறேனென்ன.

ஆசிரியர்:—உடனே சீடனைநோக்கி நீ இப்போது கொடியர்கள் சங்கதோஷத்தால்பெரியோர்கள்வாக்கிய நிந்தை சொல்லிய பாவம் நிவர்த்தியாதற் பொருட்டு.

ஆனபாவிகளடைவன நரகங்க
ளவசியமானாலும்
தானமந்திரவிரத வோமங்களாற்
றவிருமென்பது பொய்யோ.

என்றபடி,

ஆன்றோர்களாற் பாடல்களமைந்த திவ்விய க்ஷேத்திரத்திற்போய் ஓர்மண்டலம் உழவாரப்பணிவிடைசெய்து வருவதோடு ஈஸ்வரனை நோக்கி சோமவாரவிரதஞ்செய்து வருவாயென்றருள.

சீடன்:— சுவாமிகள் வாக்கியத்தைக்கேட்டு மன நடுநடுங்கி யொன்றுந்தோன்றாதவனாய்ப் பின் தெளிந்து ஐயோ கொடியர்கள் சங்கதோஷத்தினாலன்றோ இக்கதியானேம் என்று நினைத்துச் சுவாமியைநோக்கி எல்லாம் வல்ல இறைவா அடியேன் அறியாமையினாற் சொல்லிய குற்றத்தைப் பொறுத்து ரக்ஷித்தருளல் வேண்டும் தேவரீர் கட்டளையிட்டபடி பணிவிடைசெய்து வருகிறேனென்று சொல்லிப் பின்னுமொன்று வினவுவன் அதாவது இப்போது சுவாமிகள் சொல்லியபடியே பாவங்கள் செய்தவர்களெல்லாம் இப்படிப் பிராயச்சித்தம் பண்ணினால் நிவர்த்தியாய்விடுமோ என்ன.

ஆசிரியர்:—இப்போது நீ சங்கித்தசங்கை மிகவும் நல்லது அதனைச்சொல்லுவோம் கேட்பாயாக பரிசுத்தமுடையவர்கள் யாதோர்காலத்தில் அறியாமற்செய்த அற்பக் குற்றத்திற்குப் பிராய்ச்சித்தமுண்டேதவிர எப்போதும் நிரந்தரமாகப் பாவங்களைச் சாதனமாகச்செய்துவரக் கூடியவர்களுக்குப் பிராய்ச்சித்தங்கிடையா அஃது எதுபோலெனின் ஓர் மஹாராஜாவினிடத்தில் இருந்த பரிசுத்தமாகிய ஓர்கணக்கன் அவனையறியாது ஓர் சிறிய குற்றம் நிகழுமெனின் அதற்குரிய பரிகாரத்தைச் செய்வதோடு புத்திமதிகளைச்சொல்லி இனிமேல் அப்படிக் குற்றஞ்செய்யாது ஆக்கிக்கொள்வதே விதி, மேல் அவன் குற்றஞ்செய்யா திருப்பதுவே ஒழுக்கம்,அதைவிட்டு மேலும்மேலும் குற்றஞ்செய்வானெனின் அவனை அந்தவேலையினின்று நீக்கிவிட்டுக் குற்றத்துக்குரிய தண்டனைசெய்வதே விதி இதற்குமன்னிப்பு இல்லையென்றதைப்போலறியக்கடவை யென்றருள.

சீடன்:—தேவரீர்! போதித்த வாக்கியத்தை அறிந்துகொண்டனன். இனிமேல் மஹான்களான சித்தர்களின் வாக்கியத்தினையும் பெருமையினையும் அருள்செய்வீராக என்றிரங்க.

ஆசிரியர்:—வாசனை நிறைந்த மலைச்சாரலில் வாசஞ்செய்பவர்களாய் ஆதிவாசிய சரீரத்தோடு கண்ணுக்குப் புலப்படாதவர்களாய் இருக்காநி

நான்குவேதங்களிற் கூறிய மகாவாக்கியார்த்தங்களைப் பேசிக்கொண்டிருந்த சப்தமானது மிதிலாபுரிக்கு அரசனாகிய சகல சற்குணங்களுமமைந்த சனகராசன் அந்த மலைச்சாரலில் சென்றிருந்த சமையத்தில் அந்தமகான்கள் வாக்கியத்தினைக் காதிற்கேட்டவுடன் முன்செய்த தவமானது சனகராசனைவந்து பற்றிக்கொண்டது அதுநேரத்தில் பிறப்பு இறப்புஎன்னுந் துன்பத்தினைநோக்கிஅவர் பரதவித்ததைச் சொல்லுவோம் கேட்பாயாக. கெருடன் ஒலியைக்கேட்டசர்ப்பம் நடுநடுங்கியதைப் போல இவரும் பிறவித்துன்பத்துக்கு நடுக்கமுற்று உடனே தன் அரண்மனைக்குப்போய் மந்திரிகள் வசம் ராச்சியபரிபாலனத்தை ஒப்புவித்து தன் சுண்ணச்சாந்தணிந்த உப்பரிக்கையின் மேல் தனியனாயிருந்துகொண்டு அந்தமகான்கள் அருளைமுன்னிட்டு இந்த உலகநடையை நோக்கி வாய்விட்டழுது அகம்புற நாட்டந்தவிர்ந்து நின்றவிடத்தில் ஞானமென்ற ரத்தினத்தைத் திருடின கள்ளனை இப்போவன்றோ கண்டேன் கண்டேன் என்றும் இவன்பேர் மானதன் என்றும் அறிந்துகொண்டனன் என்றும் இவனை இப்போ பொன்றிவிப்பேன் என்று மறைப்பு நினைப்புமாய் நின்ற வஞ்சமாயா மனத்தினைக்கெடுத்துப் பரமானந்தத் தரங்கத்தில் மூழ்கி நிஷ்டையடைந்து பின் விழித்து எட்டாத பேரின்பம் என்னை விழுங்கி யிருக்கின்றதே என்றபடி சனகராசன் சுகநிஷ்டையி லெழுந்தருளி

யிருக்குங் காலத்தில் வியாசபகவான் புத்திரன் பிண்டஞானியாகிய சுகப்பிரமரிஷியானவர் மாயை உதிப்பதெங்ஙன் ஒடுங்குவதெங்ஙன் என்னுங்கேள்வியைத் தன் தகப்பனாகிய வியாசபகவானிடத்தில் சந்தேகித்துக்கேட்டு அவரருள்செய்த வாக்கியத்தை நம்புதலில்லாதபடியால் தகப்பனால்மாயை அடையக் கடவதென்னுஞ் சாபத்தைப் பெற்றுப் பின்மும்மூர்த்திகளிடத்திலும் போய்க்கேட்க அவர்கள் சொல்லிய வாக்கியத்தைச் சாபவலியால் நம்புதலில்லாது போய் ஓர்மலைச்சாரில் நிருவிகற்ப சமாதியில் வெகுகாலம் அமர்ந்தனர் பின் தகப்பன் பிள்ளையினுடைய சோகத்தால் சுகா சுகா என்று சப்திக்க அதற்கு அண்டபிண்ட சராசரங்களெல்லாம் ஏனென்றன அதனைக்கேட்டு தகப்பன் சந்தேகமுடையவராய் தன் உபாசனா மூர்த்தமாகிய விஷ்ணுமூர்த்தியை நோக்கி உபாசித்தனர் அதற்கு அவர் பிரசன்னமாய் உன்னுடைய புத்திரன் நம் வைகுண்டப்பரப்பில் தென்பால்வடமேற்கீழுகந்தே பதினாயிரம்வருடம் உயர்மாதவம் முறுகின்றனென்று அருள்செய்ய அறிந்துகொண்டு அவ்விடத்துக்கு அவர்போய்த்தன் கமண்டலசலத்தாற் புரோட்சித்து எழுப்ப அவர் விழித்தெழுந்து மாயை உதிப்பதெங்ஙன், ஒடுங்குவதெங்ஙன் என்னுங் கேள்வியைக்கேட்க வியாசபகவான் மிதிலாபுரிக்கு அரசனாகிய ஜனகபிரானிடத்து போய்க்கேட்கும்பக்ஷத்தில் உன்மயக்கம் நீங்குமென்று அரு

ள்செய்து தான்முன்மாயை அடையக்கடவதென்னும் சாபத்தை நிவர்த்தியாக்கிச்சென்றனர் அதன்பின் சுகப்பிரமரிஷியானவர் மிதுலாபுரிக்குவந்து சகசநிஷ்டையி லெழுந்தருளியிருக்கும் சனகராசனிடத்தில் தன்குறைகளை விண்ணப்பித்து அவர் சோதனைக்குட்படாது அவராலனுக்கிரகம் பெற்று பிண்டஞானியாகிய சுகப்பிரமரிஷியே தன்சந்தேக நிவர்த்தியாகிச் சென்றனரென்றால்சனகராசனுக்கு ஆசிரியர்களாகிய அந்தச் சித்தர்களுடைய வாக்கியப்பெருமையை அளவிடற் பாலதன்றே என்று.

சிவவாக்கியர்.

உருத்தரித்தநாடியி லொடுங்குகின்றவாயுவைக்
கருத்தினாலிருத்தியே கபாலமேற்றவல்லிரேல்
விருத்தரும்பாலராவர் மேனியுஞ்சிவந்திடும்
அருட்டரித்தநாதர்பாத மம்மைபாதமுண்மையே.

என்னிலேயிருந்தவொன்றை யானறிந்ததில்லையே
என்னிலேயிருந்தவொன்றை யானறிந்துகொண்டபின்
என்னிலேயிருந்தவொன்றை யாவர்காணவல்லிரோ
என்னிலேயிருந்திருந்து யானுணர்ந்துகொண்டனே.

நினைப்பதொன்றுகண்டிலேன் நீயலாதுவேறில்லை
நினைப்புமாய்மறப்புமாய் நின்றமாய்கைமாய்கையே
அனைத்துமாயகண்டமா யனாதிமுன்னனாதியாய்
எனக்குள்நீயுனக்குள்நா னிருக்குமாறதெங்ஙனே.

மண்ணும்நீ விண்ணும்நீ மறிகடல்களேழும்நீ
எண்ணும்நீ எழுத்தும்நீ யிசைந்தபண்ணெழுத்துநீ
கண்ணும்நீ மணியும்நீ கண்ணுளாடும்பாவைநீ
நண்ணுநீர்மை நின்றபாதம் நண்ணுமாறருளிடாய்

அரியுமல்லயனுமல்ல வப்புறத்திலப்புறம்
கருமைசெம்மைவெண்மையைக் கடந்துநின்றகாரணம்
பெரியதல்லச்சிறியதல்லப் பற்றுமின்கள் பற்றுமின்கள்
துரியமுங்கடந்துநின்ற தூரதூரதூரமே.

தூரந்தூரந்தூரமென்று சொல்லுவார்கள்சோம்பர்கள்
பாரும்விண்ணுமெங்கு மாய்ப்பரந்தவிப்பராபரம்
ஊருநாடுகாடுதேடி யுழன்றுதேடுமூமைகாள்
நேரதாகவும்முளே யறிந்துணர்ந்துகொள்ளுமே

தங்கமொன்றுரூபம்வேறு தன்மையானவாறுபோல்
செங்கண்மாலுமீசனுஞ் சிறந்திறந்தவெம்முளே
விங்களங்கள்பேசுவார் விளங்குகின்றமாந்தரே
எங்குமாகிநின்றநாமம் நாமமிந்தநாமமே

பேசுவானுமீசனே பிரமஞானமும்முளே
ஆசையானவைவரு மலைந்தலைகள்செய்கிறார்
ஆசையானவைவரு மடக்கியோரெழுத்திலே
பேசிடாதிருப்பிரேல் நாதன்வந்துதோன்றுமே

இல்லையில்லையென்று நீரியம்புகின்றவேழைகாள்
இல்லையென்றுநின்றதொன்றை யில்லையென்னலாகுமோ
இல்லையல்லவொன்றுமல்ல விரண்டுமொன்றிநின்றதை
எல்லைகண்டுகொண்டபேரினிப் பிறப்பதில்லையே

என்றும்,

## இடைக்காட்டுச்சித்தர்.

ஆதியந்தமிலாதவ நாதியைத்
தீதுறும்பவந்தீப்படமெ பஞ்சுபோல்
மோதுறும்படிமுப்பொறி யொத்துறக்
காதலாகக்கருத்திற் கருதுவாம்

மனமென்னுமாடடங்கிற் றாண்டவக்கோனே-முத்தி ,
வாய்த்ததென்றெண்ணேடா தாண்டவக்கோனே
சினமென்னும்பாம்பிறந்தாற் றாண்டவக்கோனே-யாவுஞ்
சித்தியென்றேநினையடா தாண்டவக்கோனே

ஆசையெனும்பசுமாளிற் றாண்டவக்கோனே இந்த
அண்டமெல்லாங்கண்டறிவாய் தாண்டவக்கோனே

ஓசையுள்ளடங்குமுன்னர் தாண்டவக்கோனே மூலத்
தோங்காரங்கண்டறிநீ தாண்டவக்கோனே

மூலப்பகுதியறத் தாண்டவக்கோனே உள்ளே
முளைத்தவேர்பிடுங்கேடா தாண்டவக்கோனே

சாலக்கடத்தியல்பு தாண்டவக்கோனே மலச்
சாலென்றேதேர்ந்தறிநீ தாண்டவக்கோனே

பற்றேபிறப்புண்டாக்குந் தாண்டவக்கோனே அதைப்
பற்றறுத்துவிடு தாண்டவக்கோனே

சற்றேபிரமத்திசை தாண்டவக்கோனே உன்னுள்
சலியாமல்வைக்கவேண்டுந் தாண்டவக்கோனே

அவித்தவித்துமுளையாதே தாண்டவக்கோனே பத்தி
அற்றவர்கதியடையார் தாண்டவக்கோனே

செவிதனிற்கேளாதமறை தாண்டவக்கோனே குரு
செப்பில்வெளியாமலவோ தாண்டவக்கோனே

என்றும்,

### வெண்பா.

போகம்போம், போக்கியம்போம் போசனம்
போம் புன்மைபோம் மோகம்போம் மூர்க்கம்போம்
மோசம்போம்-தாகம்போம், வேதமுதலாகமங்கண்
மேலானதென்று-பல்கால் ஓதுபிரமத்துற்றக்கால்.

மண்ணாதிபூதங்க ளைந்தையுங்கண்டேனே
மாயாவிகாரங்கள் யாவையும்விண்டேனே
விண்ணாருமொளியை மெய்யிலுட்கொண்டேனே
மேதினிவாழ்வினை மேலாகவிண்டேனே. தாந்

வாக்காதியைந்தையும் வாகாய்த்தெளிந்தேனே
மாயைசம்பந்தங்க ளக்கும்பிரிந்தேனே
நோக்கரும்யோகங்க ளங்கும்புரிந்தேனே
நுவலுமற்றைந்தியோக நோக்கம்புரிந்தேனே. தாந்

ஆறுதாரத்தெய்வங்களைநாடி-அதற்கு
மேலான ஆதியைத்தேடி-கூறுன
வஷ்டாங்கத்திற்கூடி-கோச
மைந்தாங்கண்டு குன்றேறிக்கூத்தாடி.

கோசமென்பது அன்னமயம், பிராணமயம், மனோமயம், விஞ்ஞானமயம், ஆனந்தமயம் என்பர்.

இதுவல்லாமலும் அகஸ்தியர்திருமந்திரம்.

உரையற்றதொன்றை யுரைசெய்யுமூமைகாள்
கரையற்றதொன்றைக் கரைகாணலாகுமோ
திரையற்றநீர்போற் சிந்தைதெளிவார்க்குப்
புரையற்றிருந்தான் புரிசடையோனே

என்றும்,

அகஸ்தியர்ஞானச்சுருக்கம் ௰௪.

உவமையின்னஞ்சொல்லுகிறேன் உலகத்துள்ளோர்
ஓடாதேஅலையாதே நலிபேசாதே

பகைபண்ணிக்கொள்ளாதே வீண்சொல்லாதே
பரப்பிலேதிரியாதே மலையேறாதே
நகையாதேசினவாதே வுறங்கிடாதே
நழுகாதேசுழுனைவிட்டுப் பின்வாங்காதே
ஜெகமுழுதும்பரிபூர்ண வஸ்துவென்று
தெளிந்தபின்புலகத்தோ டொத்துவாழே.

## புசுண்டர் உபநிடதம்.

ஆதியெனை யீன்றகுரு பாதங்காப்பு
அத்துவித பிரணவத்தி னருளேகாப்பு
நீதியா யாரூடக் கியானம்பெற்ற
நிர்மலமாஞ் சித்தருட பாதங்காப்பு
சோதியெனப் பாடிவைத்தேன் முப்பத்தொன்றிற்
றுரியாதீ தப்பொருளைத் துலக்கமாகத்
தீதில்லாக் குணமுடைய பிள்ளையானாற்
சீவேஸ்வரா னைக்கியந் தெரியுந்தானே. (௧)

தானென்ற குருவினுபதேசத்தாலே
தனுகரணவவித்தையெல்லாந்தவறுண்டேபோம்
வானென்றசுவானுபவக் கியானமுண்டாய்
மவுனாதி யோகத்தின் வாழ்க்கையெய்தும்
நானென்ற பிரபஞ்ச வுற்பத்திக்கு
நாதா தீதக்யானம் நன்றாயெய்தும்
கோனென்ற கொங்கணவன் றனக்குச்சொன்ன
குறிப்பானயோகமிதில் கூர்ந்துபாரே. (௨)

யாரேபிரமமிலை யார்தான் சொல்வார்
  பதமில்லை யாதினிலும் பவ்யமில்லை.
சேருமிந்தப் பிரமாணந் தன்னாலொன்றுந்
  தெரிவிக்கப் படாதருளிச் சிவன்சொரூபம்
வருகின்ற காலத்ர யங்களாலே
  யுபாதிக்கப் படாததா யுற்பத்திக்கும்
சாருமிந்த வுபாதான காரணத்தின்
  சம்பந்த மில்லாத சாட்சிதானே. (௩)

சாட்சிசத்தாயதீதகுண தீதமாகி
  சட்சுமனத்தாலறியத் தகாதுயாதும்
சாட்சியதேயேதுசாதனமுந் தள்ளிச்
  சகலவந் த்ரியாமியதாய்ச் சர்வபூத
சாட்சியினை யிவ்வளவவ் வளவாமென்று
  தனைக்குறித்து நிர்ணயிக்கத் தகாதுவியோமம்
சாட்சிஞா துருஞான ஞேயரூபஞ்
  சத்தாதிப் ரமாதிகளைத் தானேசொல்வாம். (௪)

சொல்லுமெனக் கேட்டுகந்த மாணாக்காவுன்
  தூலகாரண பிரமந் துரியாதீதம்
அல்லுமல்ல பகலுமல்ல நிஷ்களங்கம்
  ஹம்சோகம் அசபாமந் திரக்கியானம்
செல்லுமவனே நானென் றபிமானிக்கும்
  சித்தசுத்தி திரோதகமாம் யோகத்தாலே
வெல்லறிஞர் பலபோக விரக்தியோகி
  விவேகஞியா னாதிகளே மேலாம்ப்ரம்மம். (௫)

பிரமசுரோத்ராதி ஞானேந்திரிய மைந்தும்
பேசுவர்ம வாக்காதி யிந்திரிய மைந்தும்
கர்மமெனுஞ் சத்தாதி விஷய மைந்தும்
காணுதி நாலுபிரா ணாதியைந்தும்
வர்மமிவை யிருபத்தி னாலுங்கூட்டி
வருந்தூல சரீரவிராட் டென்றுசொல்லும்
தர்மவித்தை சாக்கிரமா மபிமானிவிஸ்வன்
றனக்குவமையாங் கிரியா சத்திதானே. (௬)

சத்தியுடன் ரசோகுணமாம் நேத்ரத்தானம்
தனிப்போக மிதிலுடனே சார்ந்தவான்மா
வெற்றிபெறுஞ் சீவான்மா அகாரமாச்சு
விவகார சீவனிதை விராட்டென்பார்கள்
வித்தையெனு மவித்தையிலே பிரதிபிம்ப
விசாலமிக்கத் தூலசட விருத்தியாச்சு
தத்வமசி வாக்கிய சோதனையினாலே
தான்கடந்து சூட்சமத்திற் சார்ந்துகொள்ளே.

கொள்ளடா ஞானவிந்திரிய மைந்தும்
கூடிநின்ற கர்மவிந்திரிய மைந்தும்
தள்ளடா பிராணாதி வாயுவைந்தும்
சார்வான மனதுபுத்தி தானிரண்டும்
விள்ளடா பதினேழு தத்துவங்கள்
விர்த்தியெனுஞ் சூட்சுமமா மிரண்யகர்ப்பன்
உள்ளடா அபிமானி தைசதன் றன்
சொர்ப்பன அவத்தையெனச் சொல்லுனாலே.()

ஆனான சாத்வீக ஆங்காரத்தில்
    அமைந்தயிச்சா சத்தியல்லோ அனுக்கமாச்சு
ஆலான கண்டமெனுந் தானத்துள்ளே
    கலந்திருக்கும் போகமென்ன விச்சாபோகம்
ஞாலான ஆன்மாவே அந்தரான்மா
    ஞாயமிந்தப் படியறிந்தா லுகாரமாச்சு
ஆலமெனுஞ் சூட்சமத்தைக் கடந்துநின்று
    சொல்லுகிறேன் காரணத்தின் சுயம்புதானே. ()

தானனவ் வியாக்ரதமெனுஞ் சரீரத்துக்கு
    தானமதே யிருதயமா ஞானசத்தி
வானமத மகங்கார வித்தையாகில்
    வருஞ்சுழுத்தி யபிமானி பிராஞ்ஞனாகும்
கோனிதற்கு ஆனந்த போகமாகும்
    கூறுகின்ற ஆன்மாவே பரமான்மாவாம்
ஆனிலகும் பரமார்த்த சிவனிந்தக்
    காரணமே மகாரமெனக் கண்டுகொள்ளே. (௪௦)

கொள்ளுமிந்தப் பொருள்தானே சத்துமல்ல
    கூறான அசத்துமல்ல கூர்மையல்ல
உள்ளுநிரா மயமல்ல சருவமயமல்ல
    உற்றப்பார் மூன்றெழுத்து மேகமாச்சு
தள்ளுகின்றபொருளல்ல தள்ளாதல்ல
    தானந்த பிரமைக்கிய சந்தானமுத்தி
விள்ளுமிந்தப் படிதானே வேதபாடம்
    விசாரணையில் சமாதிசெய்ய விட்டுப்போமே. ()

விட்டுப்போம் சமுசார வியாபாரங்கள்
விடயசுக விச்சைவைத்தால் விவேகம்போச்சு
தொட்டுவிட லாகாது ஞானமார்க்கம்
துரியமிலே நன்றாகத் தோணமட்டும்
எட்டுகின்ற பரியந்தம் சுருதிவாக்யத்
தெண்ணமெனும் தியானத்தாலெய்துமுத்தி
தட்டுகின்றசீவத்வம் தனக்கில்லாமல்
சமாதியுற்றாலாவதுவே சாட்சாத்காரம். (௧௨)

சாட்சாதிபிரமத்தால் பூர்வகர்ம
தத்வாதிவாசனைகள் தானேபோகும்
ருட்சாதிபிராந்தியெனு மாயாசத்தி
தொடாமற்போவதுவே சொரூபக்கியானம்
தீட்சையினால் பிரமாண்ட பிண்டாண்டங்கள்
சிருட்டிமுதல்யாவற்றுந் தெரியுநன்றாய்
காட்சியென்னஏகவஸ்து வொன்றல்லாமல் [ளே.
காண்பதெல்லாம் வியர்த்தமென்றுகண்டுகொள்

கண்டபோர்மூடமெனு மஞ்ஞானிக்கு
காணாதுசீவான்மா பரமான்மாவுந்
தொண்டுபண்ணிக்குருமுகத்தில் விசேடமாக
சுருதியெனும்வேதாந்தம் அப்யாசித்து
உண்டுஅனுபவக்கியான கிருதகிருத்ய
யோகிதனக் கேதேனுந் தேவையில்லை
விண்டுசொல்வேனதிகடக்க வோடமல்லால்
விஷயமுற்றால்சாதனங்கள் வீணாமன்றே. (௧௪)

திரமென்ன ஓமம்சோகம் மந்த்ராதீனம்
திருசியசூன் யாதிகளே தியானமாகும்
பரமென்ன சாக்கிராதி யவத்தைசூன்ய
பாவனையே சமாதியெனப் பகரும்வேதம்
வரமென்ன விபரீத நிவர்த்திமார்க்கம்
வாசனையே சாதனமாய் வகுத்துக்காட்டும்
அரமென்ன விளையறிந்தால் யோகியாவான்
அஞ்ஞான மவனிடத்தி லணுகாதென்னே. ()

என்னவே அஞ்ஞானி யுலகாசார
இச்சையதால் தர்மார்த்த வியாபாரங்கள்
முன்னமே செய்ததன்பின் மரணமானால்
மோட்சமதற் கனுபவத்தின் மொழிகேட்டீரால்
வின்னமதா மகங்கார பூதமே
விடயரூபா திகளாலே மேவிக்கொண்டு
தன்மயமாய் லிங்கசரீரத்தோ டொத்துச்
சதாகாலம் போக்குவரத் தாகுந்தானே. (கக)

தானிந்தப் படியல்லோ சீவரெல்லாஞ்
சகசபிரா ரத்வசத் தாகினார்கள்
ஏனிந்தக் கூபமா னத்திறலே
யித்தியாதி குணங்களெல்லாம் வியாபிக்கும்பார்
வானிந்தப்போல் மெலிந்து வளர்ந்துபோக
வர்த்திக்கு மஞ்ஞான மாற்றவேண்டி.
நானிந்தப் பிரமவபா சனையைப்பற்றி [ச்சே.
நாட்டம்வைத்தேன் அவித்தையெல்லாம் நாசமா

ஆச்சப்பா எத்தனையோ கோடிகாலம்
அந்தந்தப் பிரளயத்துக் கதுவாய்நின்றேன்
மூச்சப்பா வோட்டவில்லை பிரமாதீத
முத்திபெற்றேன்பிரமாண்ட முட்டவிற்சென்றேன்
கூச்சமற்றேன் நான்பிரமஞ் சாட்சாத்காரம்
குருபாத மாகியநேசரமாய்நின்றேன்
பேச்சப்பா சராசரங்க ளுதிக்கும்போது
பின்னுமந்தப்புசுண்டனெனப்பேர் கொண்டேனே.

இன்னும் இப்படி அளவிறந்தவாக்கியம் உண்டென்றருள.

சீடன்:—சுவாமிகள் வாக்கியாமிர்தத்தால் திருப்தியடைந்துமேனும் ஒன்றுவினவுகின்றேன் சர்வதயாபரனே! தேவரீர் வாக்கியத்தால் பரமசந்தோஷமானேன் இன்னுங்கேட்கும் விண்ணப்பமொன்றுளது அதாவது யோகாப்பியாசஞ்செய்து அதைப்பூரணமாய் முற்றுதலுடையார் அடையுங்கதியென்ன அதனை அடியேனுக்கு அருள்செய்வீராக என்றிரங்க.

ஆசிரியர்:—அன்பனேகேள்! அந்தப் புண்ணியசீலர்கள் சிவசாரூப பதவியினைப்பெற்று ஆங்கு நெடுங்காலம் அப்போகத்தினை நுகர்ந்து உலகமெல்லாம் சங்காரப்படுங்காலத்தில் முதல்வன் முன்னின்று அருளாணையில் மீண்டு இவ்வுலகின்கண் மேலாகிய தவமுடையார் மாட்டு சகலசற்குணங்களு

மமைந்த புண்ணியசீலராய் வந்தவதரித்துச் சற்குருவால் ஞானனுக்கிரகம்பெற்றுச் சிவசாயுச்சியத்தினைப் பெறுவர் இதுவல்லாமலும் அங்குராதனைகுளுறில் திருவடியிற் கலப்பர்.

இதற்கு உதாரணம்.

சிவஞான சித்தியார்.

தானமியாகந்தீர்த்த மாச்சிரமந்தவங்கள்
சாந்திவிரதங்கண்ம யோகங்கள் சரித்தோ
ரீனமிலாச்சுவர்க்கம் பெற்றிமைப்பளவின்மீள்வ
ரீசனியோகக்கிரியாசரியையினினின்றோ
ரூனமிலாமுத்திபதம் பெற்றுலகமெல்லா
மொடுங்கும்போதான்முனிலாதொழிவினுற்பவித்து
ஞானநெறியடைந்தடைவர் சிவனையங்கு
நாதனேமுன்னிற்கி னணுகுவர்நற்றாளே.

என்றருளி மௌனமுற்றிருந்தனர்.

உ

சிவமயம்.

# சன்மார்க்கப் படலம்.

பராபரமாய் நித்தமாய்ப் பரிபூரணமாய்
நிராமயமாய் நிட்களமாய் நீங்காப்-புராதனமாய்ச்

சத்தியமாய்ச் சித்தாய்ச் சதானந்ததேசாய்ச்
சுத்தவெறுவெளியாய்ச் சூனியமாய்ப்-புத்தமாய்

தற்பரமாய்ச் சிற்கனமாய்த் தத்துவாதீதமாய்ச்
சிற்பரமாய் ஞானச்செழுஞ்சுடராய்-யற்புதமா

யறிவுக்கறிவா யகண்டிதமா யெங்குஞ்
செறியும் பரமசிவமாய்ப்-பிறியாத

வேதச்சினகரத்துள் வீற்றிருந்ததெய்வமே.

தேவரீர் வாக்கியாமிர்தத்தால் அருளிய யாவையும் அறிந்தனன். இன்னும் கேட்கும் விண்ணப்ப மொன்றுளது அதாவது சிவசாரூபபதவியினைப்பெற்றார் அங்குநாதன் அருளுருவுறில் இவ்வுலகத்துமேலாகிய தவமுடையார் மாட்டுவந்து செனித்து அவரிருக்கும் ஒழுக்காதிகளை அருள்செய்யப்பிரார்த்திக்கின்றேனென்ன.

ஆசிரியர்:—அன்பனே அந்தப்புண்ணியசீலர் மேலாகிய தவமுடையார் மாட்டுவந்து செனித்து அவரிருக்கும் ஒழுக்கத்தினைச் சொல்லுவோம் வேதாகமவாக்கியங்களிற் கட்டுப்படாத புறமதங்களில் வெறுப்பும் அவர்களோடுறவுபண்ணு திருக்

தனும் அந்நிய சமயிகளுடன் பந்தியிலுண்ணுதிருந்தனும் வேதாகமங்களிற் சொல்லப்படும் சிவபெருமானுடைய திருவடிகளைத்தொழ நினைவில்லாதவர்கள் யாரோ அவர்கள் சிவபாக்கியத்தினை யிழந்தவர்களென்று நிச்சயிப்பதோடு,

காதும்வாதியர்களாலே கலியுகத்துள்ளோர்கெட்டு
வேதமோதியவாசெய்யார் மிருதிசொல்வதுவுஞ்செய்யார்
பூதியுமணியார்ஞான சாதனம் பூதமாக
வோதுவதொன்றுஞ்செய்யா ரொழிந்ததேயுகந்துசெய்வார்.

அவர்களோ டுறவுபண்ணு இருத்தலும்.

மையறுவேதமார்க்க மறந்துபாடாண்டமார்க்கக்
கையரான்மயக்கப்பட்டுக் கலியுகந்தன்னிலுள்ளோர்
மெய்புணர்வணந்தானந்த மேனியாஞ்சிவனைப்பூசை
செய்யவாதரியார்செய்வார் தம்மையுஞ்செய்யவொட்டார்.

அவர்களோடும் உறவுபண்ணு இருத்தலும்.

மூன்னநான்மறைகளோதி முடிந்திடும்பரமமான
சன்னியாசத்தைச்சாரார் சார்ந்தவர்தமக்குத்தீங்கு
பண்ணிடாநிற்பர்வேறு பலபலசொல்லியெல்லோ
மன்னும்வீடெய்தாதான வழிகளைமருவாநிற்பார்.

அவர்களோடு உறவுபண்ணு இருத்தலுமாமென இவைகளைச்சொல்லி இன்னும்.

மறைதனைநிந்தனை சைவநிந்தனைபொருமனமும்
தவசிகளைம்புல்லர்களுக் கேவல்செய்யுறுத்தாரும்
பிறவிநீதெறப்பேதையர் தம்மொழிவினைக்கும்
உறுதிசொல்லறஞ்செய்பவர் தமகளோடுறவும்.

யாதுநல்லன்பர் கேட்பினுமுதவுறுமியல்பும்
மாதவத்தினேரொறுப்பினும் வணங்கிமெகிழ்வும்
ஓதுநல்லுபதேசமெய்யுறுதியுமன்யர்
தீதுசெய்யினுஞ்சிவச்செய லெனக்கொளுந்தெளிவும்

மன்றும்வாக்கு நின்னன்பர்யாவொருப்படுசெயனும்
கனவிலுமுனதன்பருக் கடிமையாங்கருத்தும்
நினைவில்வேறொரு கடவுளை வழிபடாநிலையும்
புனிதநின்புகழ்காடொறு முரைத்திடும்பொலிவும்

தீமையாம்புறச் சமையங்களொழித்திடுந்திறனும்
வாய்மையாகவேபிறர்பொருள் விழைவுறாவளனும்
எமுறும்பரதார நச்சிடாதநன்றேன்பும்
தூய்மைநெஞ்சின்யானென தெனுஞ்செருக்குறாத்துறவும்.

என்றும்.

இன்னும் அவர்களுக்கு இருவினையொப்பு மலபரிபாகம் தோன்றுமுறைமையினை அருள்செய்கின்றார் அண்டசம், சுவேதசம், உற்பிச்சம், சராயுசம் என்னும் இந்நான்கினில் தோன்றும் எழுவகைப்பிறவியில் உண்டாகிய எண்பத்துநான்குநூறாயிர யோனிபேதங்களினும் அநந்தம் உருக்கொண்டு மாறிமாறிச்சுழன்று அவைதொலைத்தும் பின்பு நரவடிவுகொண்டு இவ்வடிவு அனந்தங்கோடியில் சிவபுண்ணியநேரிட்டு அச்சிவபுண்ணியத்தால் சிவத்தொண்டுபூண்டு இச்சிவத்தொண்டினால் சரியைகிரியா யோகங்களைச்செய்து இச்சரியைகிரியா யோகங்களால் இருவினை ஒப்பு மலபரிபாகம்பிறந்து உயிர்ச்சார்புபொருட் சார்புகளை நீத்துத்

தவச்சார்பில் நிற்போர்க்குக்கிடைத்தற்கு அரிதாகிய மந்தம், மந்ததரம், தீவிரம், தீவிரதரம் எனப்பக்குவம் நான் கோடு மேலாகிய வனிதாதி சுகங்களை வெறுத்து இனிமேலடையும் பதமுத்திகளினும் பூலோக போகத்திலும் விருப்பற்று அவைகளையெல்லாம் மிகவும் வெறும் பொய்யாய்க்கண்டு இவ்வுடல்தான்யாது இதனுள் இருந்தநான்யாவன் எனக்கு முதலாய் உள்ளபதியாது என்று விசாரித்து இதனை எம்மாலறியக் கூடுவதில்லை யாகலின் இவற்றையறிவிக்கும் ஞானசிரியனை யடைவோமென்று கருதித்தானென்றும் சிவமென்றும் இரண்டாய்ப் பகுத்தறிவதாய்ப் பின்னர் அச்சிவத்தோடு அத்துவிதமாக இங்ஙனம் பகுத்தறிவித்து ஒன்றுக்கும் அந்தஞானசிரியர் எங்குளர் என்று தேடும் தேட்டத்தோடு உடற்கண்வேர்வை யரும்புதலும் கண்களில் ஆனந்தநீர் பெருகுதலும் உளம்நடுங்குதலும் உடல்நடுங்குதலும் வசனம் குழறுதலும் ஆசாரியரை என்றடைவோமென்று மனம்விரைந்தாடுதலும் மேகம்போலே உள்ளேகுமுறி உளமெல்லாம் வெதும்புதலும் உடல்மயிர்க்குச் செறியும் இத்தியாதிகுணங்களோடு ஞானசிரியர் எங்குளரெனப் புண்ணியநதி தீரத்திலும் மலைக்குகைகளிலும் அடவிகளிலும் பாழ்ங்கோயில்களிலும் தேடுவதோடுமனம் சகமுகத்தைவிட்டு அகமுகமாய் நிற்றலின் அருகியநோக்கமும் எப்போது ஞானசிரியரையறிந்து அடைவோமென்னுஞ் சிந்தனையும்

அவரை நினைக்குந்தோறும் நெட்டுயிர்ப்பெரிதலும் இந்நினைவுமேலீட்டால் பிறரால் அறியக்கூடாத சுரம்மேலெழுதலும் ஆகிய இந்நான்கு அவஸ்தைகளும் மந்தபக்குவனுக்குத் தோன்றுவனவாம்.

இந்நான்கோடு இதனால் ஊண் உறக்கமுதலியவெல்லாந் துறத்தலும் இதனைப் பிறர்க்குயாதென்று சொல்லுவோமென்று சொல்லாதடக்குமானமும் ஆகிய இவ்வாறவஸ்தையும் மந்ததரனுக்குத் தோன்றுவனவாம் இவ்வாறோடு இம்மானத்தால் ஒருவரோடு ஒன்றுஞ் சொல்லாதிருக்கு மௌனமும் இங்ஙனங் கூறும் விசாரமேலீட்டால் பித்தமேறலும் ஆகிய இவ்வெட்ட வஸ்தைகளும் தீவிரனுக்குத் தோன்றுவனவாம் இவ்வெட்டோடும் இந்த அவஸ்தைகள் படுங்காலத்தும் அந்த ஞானசிரியரெதிர்ப்படாராகில் மூர்ச்சித்தலும்இறத்தலும் ஆகிய இவைபத்தும் தீவிரதரனுக்குத் தோன்றும் அவத்தைகளாம் என்ன ?

சீடன்:—எல்லாம் வல்ல இறைவா இதுவரையும் தேவரீர் போதித்த வாக்கியாமிர்த விசேடத்தினால் அந்தப்புண்ணியசீலர் ஒழுக்கம் அற்புதகுணம், இருவினையொப்பு, மலபரிபாகம், சத்திநிபாதம் முதலிய அதியற்புத விசேடங்களை அறிந்துகொண்டனன். இன்னும் அப்புண்ணிய சீலர்களுக்கு மேல் நடக்கும் விருத்தாந்தங்களை அறிய விரும்புகிறேனென்ன ?

ஆசிரியர்:—தமது உயிருளிருந்தும் தெரியாது நாம்தேடும் தேட்டமாகிய பரமானந்தப் பரங்கடல் தானே திரண்ட ஞானாசிரியராய் தமது திருமேனியை அவர் கண்ணாரக்காணும்படி புறம்பாய்க் காட்டி தன் எதிராய்த் தோன்றிநிற்கும் சற்குருநாதனை நோக்கி மோக்ஷகாமிகளாகிய அப்பக்குவர்கள்.

கண்டான் குருவைக் கண்ணாரக்
    கதறிவீழ்ந்தான் கமலமிசை
யண்டாவரனே நெடுமாலே
    யயனேயென்று னகமகிழ்ந்தான்
றொண்டாலியலும் பணிசெய்யத்
    துணிந்தான்பணிந்தான் மும்முறையே
பண்டாளிறைந்த பாவானுங்
    காவாயென்னப் பாடினான்.

அருவமாய் நின்றாய்போற்றி
    யடியனேன் பொருட்டாயின்று
னுருவமாய் வந்தாய்போற்றி
    யுயிர்பொருளுடலுங்கொண்டு
பருவமில் பாவியேனைப்
    பரிந்தருள் செய்வாய்போற்றி
குருபரா போற்றியுன்றன்
    கோகனகத் தாள்போற்றி.

பரமஞானமாம் பாற்கடல்பண்ணிய
பரமனே யடிபோற்றி
கரதலாமலகத்தி னேர்பரவொளி
காட்டிடுங் கழல்போற்றி
ஒருபராபரமன்றினீ யொருவனு
மாகியவொளிபோற்றி
பிரமநாரண சங்கரபோற்றியெம்
பெருமநின் பதம்போற்றி.

அடையயேறிந் தொருவானுன்னையிங்
கறிவரியாய்ப்போற்றி
உடையதாமுல கனைத்தையுந்தரித்தொரு
துவக்கறு சுடர்போற்றி
முடிவுமாதியுங் கண்டிலீமுதன்முடி
வின்றிய முதல்போற்றி
வடிவியாவையு முடையையாயுனக்
கொருவடி விலாதாய்போற்றி.

வேதமோதிய விமலனேபோற்றிவே
தாந்தமெய்ப் பொருள்போற்றி
காதுமாபிறவிக்கடல் கடத்துநின்
கழலிணைப் புணைபோற்றி
சாதலானதும் பிறப்புமற்றிருந்துள
சம்புவே கழல்போற்றி
யேதுமாயினுய்போற்றி யோரளவிலா
வின்பமே கழல்போற்றி.

தோத்திரஞ் செயப்படுபவனாகியத்
    தோத்திரந் தானாகி
யேத்திநிற்பவனாகியே யிருந்துள
    விறைவனே கழல்போற்றி
காத்திரந்தனையெடாவகை மெய்யினைக்
    காணவே நினைவோர்க்கு
நேத்திரங்கொடுத் தருளியங்கவர் துயர்
    நீக்குநின்மலபோற்றி.

ஈசனுக்கன்பரானார்க்
    கன்பருமிறைவபோற்றி
நாசமற் றிருப்பாய்போற்றி
    நாரணர்க்கினியாய்போற்றி
யாசையற்றவர்க்குஞான
    மருளுவாய் போற்றியல்லாப்
பாசமுற்றவரைவெய்ய
    பவத்திடும் பகைவபோற்றி.

ஒளிவளர்விளக்கே யுலப்பிலாவொன்றே
    யுணர்வுசூழ் கடந்ததோருணர்வே
தெளிவளர்பளிங்கின் றிரண்மணிக்குன்றே
    சித்தத்துட்டித் திக்குந்தேனே
யளிவளருள்ளத் தானந்தக்கனியே
    யம்பலமாடரங்காக
வெளிவளர்தெய்வக் கூத்துகந்தாயைத்
    தொண்டனேன் விளம்புமாவிளம்பே.

என்று இவ்வாறாகப் பரமாசிரியனுக்குத் தோத்திரப் பாமாலைசூட்டி அன்பென்னும் ஆறுகரைபுரண்டெழுந்த அவ்வாசிரியரைப் பலதரம் வலம்வந்து அஷ்டாங்கமுதலிய வணக்கஞ்செய்து பின்னெழுந்து அஞ்சலி யத்தராய் நின்று ஆனந்தக் கண்ணீரொழுக அனேக தோத்திரம் பண்ணி எமது சுவாமிகளே ! அடியேங்களுக்கு இவ்வுடல் வந்தவாறியாது இவற்றுள்ளிருந்த யாம் ஆர் எமக்கு முதலாயுள்ள மெய்ப்பொருள்யாது என்று கேட்ட அதிபக்குவமுடையோர்களுக்குவேதாகமங்களில் விதித்துவைத்தபடி அவ்வாசிரியர் அப்பக்குவர்களுக்குப் போதிக்கும் முறைமையினை நீயும் அவ்வாக்கியத்தினைக் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து நிஷ்டையடையுமாறு யாம்உன்றனக்கு அருள் செய்வோம் கேட்பாயாக. பறவைமுட்டையைச் செட்டையால் பரிசித்தல்போல் மாணாக்கனை கரசரணங்களால் பரிசித்தும் ஆமைகரைக்கண்ணிருந்த முட்டையைத்தன் மனத்தில் பாவித்தல்போல் அவனைத்தனது அருளுருவாய்ப் பாவித்தும் மீன்தனது சினையைப்பார்த்தல் போல் அவனைத்தமது கிருபைப் பார்வையால் பார்த்தும் மலத்தினை நீக்குவரென்று அருள.

சீடன்:—சுவாமி தேவரீர்போதித்த அருள்வாக்கியத்தினைத்தெரிந்து கொண்டனன். தெரிந்துகொண்டாலும் இன்னுங்கேட்கும் விண்ணப்பமொன்றுளது அஃதாவது அப்பக்குவருக்கு முறையே

உபதேசிக்கும் விபரத்தினை அருள்செய்யும்படி பிரார்த்திக்கின்றேன் என்றிரங்க.

ஆசிரியர்:—அன்பனே ! அதனையருள்செய்வோங் கேட்பாயாக மந்தம் மந்ததரம் தீவிரம் தீவிரதரம் என்னும் பக்குவர் நால்வருள் தீவிரதர பக்குவனுக்கு ஞானாசிரியர் சகல கேவல சுத்த அவத்தைகளைக்கடந்து நின்ற பரமானந்தப் பரம்பொருளில் தாம் அசைவறவிருந்து சின்முத்திரையாற்காட்டி வாக்கால் ஒருமொழியுங் கூறாமல் குறிப்பால் கூறிய ரகசியத்தினை திருவருளால் சீடன் அறிந்து தற்போதம் அற்று அருட்போதம் உற்று பேரானந்த முற்றவர்க்கே கண்ணீர்கம்பலை யுண்டாகுமென்றபடி பரமானந்தக்கடலில் மூழ்கி நிஷ்டை யடைந்தனன் என்றருள.

சீடன்:—இதற்குப்பிரமாணம் உளவோ

ஆசிரியர்,—கீழ்வருவனவே.

தாயுமானசுவாமிகள்.

கல்லாலி னீழறனி லொருநால்வர்க்குங்
கடவுணீ யுணர்த்துவதுங் கைக்காட்டென்றால்
சொல்லாலே சொலப்படுமோ சொல்லுந்தன்மை
அரும்புபற்றிக் கடல்கடக்குந் துணிபேயன்றே.

திருவிளையாடற்புராணம்.

கல்லாலின் புடையமர்ந்து நான்மறையா
றங்கமுதற் கற்றகேள்வி

வல்லார்களுல்வருக்கும் வாக்கிறந்த
பூரணமாய் மறைக்கப்பாலாய்
எல்லாமாயல்லவுமா யிருந்ததனை
யிருந்தபடி யிருந்துகாட்டிச்
சொல்லாமற்சொன்னவரை நினையாம் னினைந்துப
தொடக்கை வெல்வாம். (வத்

ஒளிவிலோக்கம்.

சும்மாதே பார்த்திருக்கச்
சுத்தியாம் உத்தமர்க்கு.

என்று அருள்செய்து,

இன்னும் இப்படி அளவிறந்தவாக்கியம் உண்டென்ன.

சீடன்:—சுவாமி ? தேவரீர் தீவிரதானுக்குப் போதித்த முறைமையினை அறிவிக்க அறிந்தனன் மேல் தீவிரனுக்குப்போதிக்கும் விருத்தாந்தங்களை யறிய விரும்புகிறேன் என்ன.

ஆசிரியர்:—அன்பனே கேள் தீவிரனுக்கு ஓர் மொழியால் மலரின் மணம்போலும் உடலு முயிரும்போலும், கண்ணு மிரவியும்போலும் இவைகள் எப்படிவேறுபடாது அனன்னியமாய் இருக்கின்றனவோ அப்படியே ஆன்மாவும் சிவமும் வேறுபடாது அனன்னியமாய் இரண்டற்று இருக்கும் என்னும் உண்மையுணர்வை யுதிப்பித்து உன்னைவிட சிவம் அன்னியமாய் இருக்கும் என்று எண்

றும் மோகத்தை யொழி என்றநுக்கிரகித்த வாக்கியத்தால் தற்போதங்கெட்டு அருட்போதமேலிட்டு தேகாதிபிரபஞ்ச தோற்றமின்றித் தன்னையும் அருளாற்கண்டு தன்னிடத்தில் அனன்னியமாயிருக்கு முதல்வனையுங்கண்டு கொண்டோம் என்னும் நினைவும் அறவிடுத்து அறிவானந்தத்தில் மூழ்கி நிஷ்டையடைந்தனன் என்றருள.

சீடன்:—இதற்குப்பிரமாணம் உளவோ.

ஆசிரியர்:—தாயுமானசுவாமிகள்.

என்னையுந்தன்னையும் வேறாய்உள்ளத்
தெண்ணுதவண்ணம் இரண்டறநிற்க
சொன்னதுமோ வொருசொல்லே அந்தச்
சொல்லால்விளைந்தசுகத்தை யென்சொல்வேன்

அன்றியும்,

நானெனவு நீயெனவு மிருதன்மை
நாடாமனடுவேசும்மா
தானமருநிலையிதுவே சத்தியஞ்
சத்தியமெனநீ தமியனேற்கு
மோனகுருவாயுங் கைகாட்டினையே
திரும்பவுநான் முனைத்துத்தோன்றி
மானதமார்க்கம்புரிந்திங் கலைந்தேனே
பரந்தேனே வஞ்சனேனே:

பட்டினத்தடிகள்

உடலுமுயிரும் போலுட்கலந்து நின்றாண்டு.

சிவஞானசித்தியார் ஸ்துதி.

பண்ணிசைவெம்பருதிமதி நிலநீரிலங்
தீயிரும்புபாணியுப்பு
விண்ணாளிலமுடலுயிர் நீர்விழலுச்சிப்
பளிங்குபகல் விளக்குப்பாலீர்
கண்ணிரவி புணர்வொளிபோற்பிரிவரிய
வத்துவிதக் கலவிகாட்டித்
தண்ணளிவைத் தெனையாண்ட துறைசை
நமச்சிவாய குருசரணம்போற்றி

என்று அருள்செய்ய,

சீடன்:—சுவாமி என்போலிகளும் ஆன்மாவும், சிவமும், இரண்டற்று இருக்குமென்று நிச்சயித்துக்கொண்டால் எல்லாமுடிந்து விட்டதோ என்ன.

ஆசிரியர்:—அன்பனே கேள்! நீ இப்போது சம்சித்த சங்கையானது மிரம்பவுமேன்மை உடைத்து எனெனின் இருவினையொப்பு மலபரிபாகம் சத்திநிபாதம் இல்லாதவர்களும் வாசகஞானத்தால் ஆன்மாவும் சிவமும் இரண்டற்று இருக்கிற

தென்று நிச்சயித்துக்கொண்டு இதனுல் எல்லாம் முடிந்து விட்டதாக எண்ணி இருமாப்புற்று இருக்கின்றனர் இதனைநோக்கியன்றோ தாயுமான சுவாமிகள்.

பட்டப்பகற்பொழுதை யிருளென்றமருளர்தம்
  பக்ஷமோவெனது பக்ஷம்
பார்த்தவிடமெங் கணுங் கோத்தநிலைகுலையாது
  பரமவெளியாகவொருசொற்
றிட்டமுடன்மௌனியா யருள்செய்திருக்கவுஞ்
  சேராமலாராகநான்
சிறுவிகெட்டியதி னடிசோற்றை யுண்டென்று
  தேக்குசிறியார்கள்போல
நட்டணையதாக்கற்ற கல்வியும்விவேகமு
  நன்னியையமாகவுன்னி
நானென்றுநீயென் றிரண்டில்லையென்னவே
  நடுவேமுளைத்தமனதைக்
கட்டவறியாமலே வாடினேனெப்போது
  கருணைக்குரித்தாவனோ
கருதரியசிற்சபையி லானந்தநிர்த்தமிடு
  கருணாகரக்கடவுளே.

என்றும்,

உன்னிலையும் என்னிலையு மொருநிலை யெனக்கிடந்
  துவாரிடமைவஸ்தையாக்கி

என்றும்,

சகஞானத்தால் வருமோசகம்

என்றும்,

றவறிவா லுனைநான்கண்டவன் போல்கூத்தாடிற்
)றமென்றென்னெஞ்சேசொதிக்கும் பராபரமே.

என்றும்,

அருள்செய்திருக்கின்றமையின் வாசகஞான
ால் பயனில்லை யென்றறிக.

சீடன்:—சுவாமி இதுவெல்லாம் வாசகஞான
ன்ருல் அநுபோக ஞானத்தால்தன்னை யறி
ற எப்படி யென்றிரங்க..

ஆசிரியர்:—உயிர் பஞ்சேந்திரிய வயமாய்ச்
ன்று விடயபோகங்களைப் புசிக்கும் இச்சையற்
ல் தன்னையறியு மென்ன.

சீடன்:—சுவாமி வாசகஞானிகள் கூறுமயக்க
ழ்னை பொய்மையென்று அறிந்துகொண்டனன்.
ன்னும் ஓர்சந்தேகம் உளது அஃதாவது தேவரீர்
க்கியப்பட தன்னையறிந்ததின்பேரில் தன்னைவி
ந நீங்காதிருக்கும் தலைவனை அறிய வெவ்வளவு
லம்செல்லுமென்ன.

ஆசிரியர்:—நகைத்து, தன்னை அறிந்தவுடன்
லைவனுடைய பற்றொழிய வேறுபற்றில்லை யென
அறிவாயாக.

தாயுமானவர்.

தன்னையறியா தசகந் தானுயிருந்துவிட்டா
லுன்னையறிதற் குபாயமுண்டோபராபரமே.

தன்னையறிந்தாற் றலைவன்மேற்பற்றலது
பின்னையொருபற்றுமுண்டோ பேசாய்பராபரமே.

யென்றருளி,

சீடன்:—இதுவரையும் போதித்த வாக்கியத்தினை தேவரீர் கிருபையால் அறிந்துகொண்டனன் அறிந்தாலும் ஓர் சந்தேகம் உளது அதாவது தீவிரபக்குவமுடையான் குருவினிடத்தில் உபதேசம் கேட்டவுடன் தன்னையுந் தலைவனையும் ஓர் வருத்தமின்றி அறிந்து கொண்டான் என்றால் ரொம்ப லேசாய் ஞானத்தை அடைந்துகொள்ளலாம்போல் இருக்கிறது என்பதாக நிச்சயிக்கிறேனென்ன.

ஆசிரியர்:—அன்பனே யிதுவரைக்கும் சொல்லிவந்த வாக்கியத்தினை மறந்தனைபோலும் அதாவது அந்தப்பக்குவன் முன்சென்மாந்தரங்களில் முறையே அனந்தங்கோடி சென்னங்களில் சிவபுண்ணியம் மேலிட்டு அச்சிவபுண்ணியத்தால் சிவத்தொண்டுபூண்டு அதனால் சரியை கிரியை யோகம் எத்தனையோ சென்மாந்தரங்களில் முற்றுப்

பற்று அதனால் இருவினை ஒப்பு மலபரிபாகம்
த்தினிபாதம் பிறந்து மோக்ஷவிச்சையைத்தவிர
ற்ற ஒன்றிலும் இச்சையில்லாது தனக்கும் தலைவ
னுக்கும் இருக்கும் முறைமையினைத் தெரிந்துகொ
ளவேண்டுமென்று தலையில் நெருப்புப் பற்றிக்
கொண்டால் நீரினைத்தேடுபவன்போலத் தேடி சற்
ருவைநாடி அவரது திருவருட் குறிப்பிற்கூடி
ன் சந்தேகம் ஒழிந்து பரமானந்தத் தரங்கத்தில்
மூழ்கினவனுக்கும் வாசகஞானிகளுக்கும் சரியா
மோ வீண் சங்கையை விட்டுவிடுவாயாக.

தாயுமானவர்.

யோகியர்க்கேஞான மொழுங்காம்பே ரன்பான
ாகியரும்யோகமுன்னே சார்ந்தோர்பராபரமே.

என்று அருள்செய்ய,

சீடன்:—சுவாமிகளை நோக்கி வஞ்சகமில் பரமார்த்த குருவே தேவரீர் இதுவரைக்கும் போதித்த வாக்கியத்தினால் தீவிரதரன் தீவிரன் இவ்விருவரும் குருவினிடத்தில் அனுக்கிரகம்பெற்று நிஷ்டை அடைந்த முறைமையினை அறிந்தனன். இனிமேல் மந்ததரபக்குவனுக்கு அறிவிக்கும் முறைமையினையறிய விரும்புகிறேனென்ன.

தாயுமானவர்.

தன்னையறியாதுசகந் தானாயிருந்துவிட்டா
லுன்னையறிதற் குபாயமுண்டோபராபரமே.

தன்னையறிந்தாற் றலைவன்மேற்பற்றலது
பின்னையொருபற்றுமுண்டோ பேசாய்பராபரமே.

யென்றருள,

சீடன்:—இதுவரையும் போதித்த வாக்கியத்தினை தேவரீர் கிருபையால் அறிந்துகொண்டனன் அறிந்தாலும் ஓர் சந்தேகம் உளது அதாவது தீவிரபக்குவமுடையான் குருவினிடத்தில் உபதேசம் கேட்டவுடன் தன்னையும் தலைவனையும் ஓர் வருத்தமின்றி அறிந்து கொண்டான் என்றால் பிரம்ம லேசாய் ஞானத்தை அடைந்துகொள்ளலாம் போல் இருக்கிறது என்பதாக நிச்சயிக்கிறேனென்ன.

ஆசிரியர்:—அன்பனே யிதுவரைக்கும் சொல்லிவந்த வாக்கியத்தினை மறந்தனையோ,நாம் அதாவது அந்தப்பக்குவன் முன்சென்மாந்தரங்களில் முறையே அனந்தங்கோடி சென்மங்களில் சிவபுண்ணியம் மேலிட்டு அச்சிவபுண்ணியத்தால் சிவத்தொண்டுபூண்டு அதனால் சரியை கிரியை யோகம் எத்தனையோ சென்மாந்தரங்களில் முற்றுப்

பெற்று அதனால் இருவினை ஒப்பு மலபரிபாகம் சத்தினிபாதம் பிறந்து மோக்ஷவிச்சையைத்தவிர மற்ற ஒன்றிலும் இச்சையில்லாது தனக்கும் தலைவனுக்கும் இருக்கும் முறைமையினைத் தெரிந்துகொள்ளவேண்டுமென்று தலையில் நெருப்புப் பற்றிக் கொண்டால் நீரினைத்தேடுபவன்போலத் தேடி சற்குருவைநாடி அவரது திருவருட் குறிப்பிற்கூடி தன் சந்தேகம் ஒளிந்து பரமானந்தத் தரங்கத்தில் மூழ்கினவனுக்கும் வாசகஞானிகளுக்கும் சரியாமோ வீண் சங்கையை விட்டுவிடுவாயாக.

தாயுமானவர்.

யோகியர்க்கேஞான மொழுக்காம்பே ரன்பான
தாகியரும்யோகமுன்னே சார்ந்தோர்பராபரமே.

என்று அருள்செய்ய,

சீடன்:—சுவாமிகளை நோக்கி வஞ்சகமில் பரமார்த்த குருவே தேவரீர் இதுவரைக்கும் போதித்தவாக்கியத்தினால் தீவிரதரன் தீவிரன் இவ்விருவரும் குருவினிடத்தில் அனுக்கிரகம்பெற்று நிஷ்டை அடைந்த முறைமையினை அறிந்தனன். இனிமேல் மந்ததாபக்குவனுக்கு அறிவிக்கும் முறைமையினையறிய விரும்புகிறேனென்ன.

வாழ்கவந்தணர் வானவரானினம்
வீழ்கதண்புனல் வேந்தனுமோங்குக
ஆழ்கதீயதெல்லா மரனாமமே
சூழ்கவையக முந்துயர் தீர்கவே.

ஸ்ரீகணபதியானந்ததேசிகன் திருவடிவாழ்க.

# வேதாகம சோபான முறை.

முதற்பாகம்.

முற்றிற்று.

—oo:o:oo—





உ

சிவமயம்.

புதிதாய் அச்சிட்ட

# புத்தக விளம்பரம்.

——[*]——

## வேதாகம சோபான முறை.

நயம்பதிப்பு கிளேஸ்காகிதம் விலை அணா—12.

## திருப்புகழ் உரா பாடல்.

அருணகிரிநாதர் திருவாய்மலர்ந்தருளிய 16000 பாடலில் முக்கியமாகிய 200 பாடல் மட்டும் கிளேஸ்காகிதத்தில் சுத்தமாய் அச்சிட்டது.

விலை அணா—4.

## மகாராணி அம்மானை.

இந்நூலானது மிகவும் அருமையான புத்தகம் இதில் ஆங்கிலேய அரசாக்ஷியைப்பற்றியும் நாளதுவரையில் அரசாக்ஷிசெய்துவரும் பெருமையும் சிறப்பும் மகாராணியாரின் சரிதமும் விஸ்தீரணமாயெழுதி அம்மானைநடையில் பளபளப்பான காகிதத்தில் அச்சிட்டது. விலை அணா—8.

## மாகபுராணம்.

இப்புராணம் பளபளப்பான காகிதத்தில் அச்சிட்டு நயிஸ்பயிண்டுசெய்தது. சைவசிரோன்மணியாகிய அதிவீரராமபாண்டியன் பாடியது இதன் பெருமை அனேகமுளது. அணா—6.

## சுப்பிரமணியர் காவடிச்சிந்து.

அண்ணாமலைரெட்டியார் சுப்பிரமணியர்பேரில் இயற்றிய காவடிச்சிந்தை நாமாகாகிதத்தில் சுத்தமாக அச்சிட்டது. விலை பை—6

## பட்டினத்துசுவாமி திருப்பாடற்றிரட்டு.

பட்டினத்துசுவாமிகள் திருவாய்மலர்ந்தருளிய திருப்பாடற்றிரட்டு பிழையில்லாமல் திக்குக்கடுதத்தில் அச்சிட்டது. விலை அணா—1

## ஜெனனஜாதகம்.

இந்த ஜெனனஜாதகம் ஒவ்வொருவருக்கும் அவசியமாயிருக்கவேண்டியது. ஏனென்றால் புத்திரன் புத்திரி ஜெனமித்தவுடனே ஜோதிடனைத் தேடாமல் தாங்களே ராசிலக்கினம் குறித்துக்கொள்ளும் குறிப்பு புத்தகம். விலை அணா—1

கலியுகபிரட்டெண்ணும் மோடிவித்தை விலை பை-6

வன்னிராயசுத சங்காரம் பை 6

---

வேண்டியவர்கள் அடியிற்கண்ட விலாசத்துக்கெழுதி வி. பி. மூலமாய்ப் பெற்றுக்கொள்ளலாம்.

இப்படிக்கு

இராமலிங்கக்குருக்கள்,

சச்சிதானந்தம் பிரஸ்,

விருதுபட்டி.